REGD. NO. M. 4392

# இன்னுமொரு சினிமா நட்சத்திரம் டி. எ. ஜயலக்ஷ்மி லக்ஸ் டாய்லட் சோப்பின் *புதிய பரிமளத்தால்* வசியப் படுத்தப் பட்டார்




சினிமா நட்சத்திரங்களின்
அழகு தரும் சோப்

"நான் லக்ஸ் டாய்லட் சோப்பின் ரம்மியமான புதிய பரிமளத்தை மிகவும் விரும்புகிறேன்" என்று கூறுகிறார்

LTS. 207-172 TM




உங்கள் வீட்டுச் சலவை காரியத்தில் ஏன் வீண் வேலை வளர்க்கிறீர்கள்? உதாரணமாக, சீமைச்சுண்ணாம்போ உருளைக்கிழங்குமாவோ கலந்து எடை நிரப்பப் பெற்றதோர் சாதாரண சோப்பை உபயோகிப்பானேன், அதைத் துறைத்து கையுடன் துணியையும் நாசமாக்குவானேன்!

மட்டசரக்கு போலிகளை விலக்கி, சுத்தமானதோர் சோப்பை உபயோகித்து கையும் துணியும் மிச்சப்படுத்துவதன்றோ பகுத்தறிவுக்கடையாளம்!

# கேரளா

# வாஷ்வெல்




## சுத்தமான பார் ஸோப்

வீட்டுச்சலவையை
மிகவும் சுலபமாக்குவது

தயாரிப்பாளர்கள் —

**கேரள சோப்பு இன்ஸ்டிட்யூட்
கள்ளிக்கோட்டை**

டிபார்ட்மெண்ட் ஆப் காமெர்ஸ் அண்டு இண்டஸ்ட்ரீஸ்

**கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்**

யும் இழக்கிறார்கள்! சிலர் கைப்பிடி தவறி, உயிர்போகு மளவுக்கு அபாயத்திற் குள்ளாகிறார்கள்!

காரணம், வண்டி பிளாட்பாரத்தில் நின்று மிக மிகக் குறுகிய நேரத்திற்குள் மறுபடியும் புறப்பட்டு விடுவதுதான். பிரயாணிகள் ஏறிக் கொண்டோ, இறங்கிக் கொண்டோ இருப்பதைப் பார்த்துங்கூட, கார்டு விசிலை ஊதி விடுகிறார்; வண்டி பறந்து போகத் தயாராகி விடுகிறது.

ஆகவே, பொதுஜனங்களின் நன்மைக்கென ஓட்டப்படுகிற இந்த வண்டி, ஒவ்வொரு ஸ்டேஷனிலும் இதைவிட அதிகநேரம் நின்று, பிரயாணிகளின் சௌகரியத்திற் கேற்றபடி ஓட்ட எஸ். ஐ. ஆர். ஏற்பாடு செய்யுமா?

நெல்லை — பெ. இராஜேந்திரன்
14—12—49

○●○

## சுயபுத்தி

நான் ஒரு ஹைஸ்கூல் மாணவி. சாதாரணமாக இப்பொழுது சில ஆசிரியர்கள் பாடம் போதிக்கும் முறையைப் பற்றிக் கூறுகிறேன். இவர்கள் பாடம் நடத்தும்போது அந்தப் பாடத்தில் கேள்விகள் கொடுத்து அதற்குப் பதிலும் சொல்லி அப்படியே எழுதிக்கொள்ளச் சொல்லுகிறார்கள். மாணவர்களுக்கு அவர்களே எழுதிப் பழகச் சந்தர்ப்பம் கிடைப்பதில்லை. ஆகவே அவர்களுக்கு அதையே பாடம் பண்ணி எழுதுவது வழக்கமாகி விடுகிறது. தானே ஆலோசித்து எழுத வேண்டும் என்ற நோக்கமே போய் விடுகிறது. இது மாதிரியே பரீட்சைக்கு முன்பு 'பயிற்சி' என்ற பெயரில் சில கேள்விகள் கொடுத்துப் பதிலும் சொல்லி அதை எழுதிக்கொள்ளச் சொல்லுகிறார்கள். அதில் முக்கால் பாகம் அப்படியே பரீட்சையில் வந்து விடுகிறது. பரீட்சை இப்படி யிருந்தால் மாணவர்கள் எவ்வளவு அக்கறையோடு படிப்பார்கள் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளலாம். தவிர பரீட்சையில் ஆசிரியர்கள் கொடுத்த பதிலை அப்படியே எழுதவேண்டும். சிறிது மாற்றித் தன்னுடைய சொந்த வாக்கியத்தில் (கருத்து மாறாதபடி) அமைத்து எழுதினாலோ மார்க் குறைக்கப்படுகிறது. ஆகவே இதற்குப் பயந்து கொண்டு ஆசிரியர்கள் கொடுத்ததையே உருப் போட்டு எழுதவேண்டி வருகிறது. இப்படி ஏற்படுவதன் காரணம் அந்த ஆசிரியர்களுடைய முக்கியமான குறிக்கோள் "தன் வகுப்பு மாணவர்கள் நிறைய மார்க் வாங்கி, பாஸாகித் தனக்கு நல்ல பெயர் ஏற்பட வேண்டும்" என்பதே. அவர்கள் அறிவு எப்படியிருந்தாலும் சரி. கொடுத்த பதிலை அப்படியே பாடம் பண்ணிப் பரீட்சையில் எழுத வேண்டும். அவ்வளவுதான். இந்தச் சுயநல எண்ணத்தினால் மாணவர்களுடைய அறிவு வளர்ச்சிதான் பாதிக்கப்படுகிறது. தற்காலத்தில் எல்லோரும் சொல்கிறார்கள், அதாவது முன்பு இருந்த படிப்பு அதன் தரம் இப்பொழுது இல்லையென்று. அதற்கு முக்கியமான காரணங்களில் இதுவும் ஒன்று. காலேஜில் படிக்கும்பொழுது மேற்படி ஹைஸ்கூல் முறையைக் கடைப்பிடிக்க முடிவதில்லை. அச்சமயத்தில் அவர்கள் நிலைமை மிகவும் மோசமாகத்தான் இருக்கிறது. தன்னுடைய அறிவை உபயோகப்படுத்தவும் இயலாது திண்டாடுகின்றனர்.

கோவை — ஆர். சரோஜா
11—12—49



சிறைக்காவலாளி:—உம்மை யாரோ பார்க்க வந்திருக்கிறார்கள்.

கைதி:—உள்ளே இல்லை, வெளியே போயிருக்கிறார் என்று சொல்லிவிடும்!

○●○

## இது என்ன பஞ்சம்?

இரண்டாவது உலக மகா யுத்தம் 1939-ல் ஆரம்பமான போதிலும், 1942 வரை பாமர ஜனங்கள் உணவுப் பொருளின் விலையேற்றத்தைப் பற்றி அதிகம் கருதவில்லை. ஏனென்றால் அப்போது சகிக்க முடியாத அளவுக்கு விலைகள் ஏறவில்லை. ஆனால் 1942 முதல் 1947 வரை விஷம் ஏறுவதுமாதிரி ஏற ஆரம்பித்தன. அப்போதிருந்த சர்க்கார் நிர்வாகஸ்தர்கள் உணவுப் பொருள்களின் விலைகளைக் கட்டுப்படுத்தினார்கள். உதாரணமாக அரிசி, சீனி, கோதுமை மற்றும் சில தானியங்களுக்கு விலைக்கட்டுப்பாடு இருந்தது. அரிசியை எடுத்துக் கொண்டோமானால் ரூபாய்க்கு இரண்டேகால் படி கொடுத்தார்கள். சீனி வீசை ஒன்றுக்கு 12 அணா விதம் கொடுத்தார்கள்.

1947-ம் ஆண்டு முதல் நாளது தேதிவரை (சீனியைத் தவிர) அரிசிக் கட்டுப்பாடு தொடர்ந்து வந்திருக்கின்றது. ஆனால் சர்க்கார் கொள்முதல் செலவில் ஒன்றரை மடங்குக்கு மேல் கூடுதல். காரணம் சிப்பந்திகள் தொகை கூடுதலாம். உள்நாட்டு விளைச்சல் (சென்னை மாகாணம்) குறைவில்லையாம். ஆனால், கொள் முதல் அளவு குறைவாம். கொள்முதல் செய்யுமிடத்திலிருந்து உண்ணும் இடம் வரை நான்கு அல்லது ஐந்து கை மாறுவதால் உண்டாகும் செலவு கூடுதலாம். அதனால்தான் ரூபாய்க்கு ஒன்றேகால் படி அரிசி கொடுக்கின்றார்கள். ஒரு வாரம் பச்சரிசி கேட்டால் புழுங்கல் அரிசிதான் இருக்கும். மறு வாரம் புழுங்கலரிசி கேட்டால் பச்சரிசிதான் இருக்கும். கொடுக்கும் அரிசியோ சுத்தமாக இருக்காது. விலையும் கூடுதல், ரகமும் மட்டம்.

"பச்சரிசி இல்லையென்றால் புழுங்கலரிசி உபயோகிக்க வேண்டும். புழுங்கலரிசி கிடைக்காவிட்டால் கோதுமை உபயோகிக்க வேண்டும். கோதுமைக்குப் பதில் கடலை. கடலைக்குப் பதில் அது. அதற்குப் பதில் இது" என்கிறார்கள். ஒன்றுமே கிடைக்கா விட்டால் வாரத்திற்கு ஒரு நாள் ஏகாதசி, அல்லது இரண்டு நாள் பட்டினி.

எங்கள் குடும்ப வரும்படி ரூ. 100. வீட்டில் மூன்று பெரியவர்களும், ஐந்து சிறுவர்களும் இருக்கிறோம். வாரம் ஏழேகால் படி அரிசி ரேஷனில் கிடைக்கும். அதைத் திருப்பக் குத்தி,

சாப்பிடுகிற பருவத்திற்குக் கொண்டு வருவ தற்குள் முக்கால் படி அல்லது ஒரு படி அரிசி குறைந்து விடும். மீதி ஆறரைப் படியை வைத்து ஏழு நாட்கள் தள்ள வேண்டும். பெரிய வர்கள் இரண்டு வேளைச் சாப்பாட்டைக் குறைத்துக் கொள்ள வேண்டும். சிறுவர்கள் ஒரு நாள் இரவுச் சாப்பாட்டைக் குறைத்துக் கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் ஏழு நாட்களுக்குச் சரிக்கட்டும்.

நெருங்கிய பந்துவோ, விருந்தினரோ வீட் டுக்கு வந்தால் ஒன்றிரண்டு பேருக்குக் காய்ச் சல் வந்துவிடும்; சாப்பாடு தேவையில்லை என்று சொல்லி விடுவார்கள். இது இயற்கைப் பஞ்சமா? அல்லது செயற்கைப் பஞ்சமா?

மேலூர்
28—11—49 கே. எஸ். சங்கரராமன்

○●○

## ★ மனமிருந்தால் இடமும் உண்டு

படிக்க ஆசை எனக்கு ரொம்ப
பள்ளிக்கூடம் போயிருந்தோம்!
அப்பாவுமே கூட வந்து
அலைஞ்சலைஞ்சு பார்த்திட் டாரு!
எட்டுமாஸ்டர் எரிச்சலோட
இடமில்லேன்னு சொன்னாரு!
கெஞ்சிக் கெஞ்சிக் கேட்டுப் பார்த்தோம்
கிடையாதுன்னு சொல்லிட்டாரு!

பணக்காரங்க மக்களெல்லாம்
படிக்க மேலே வாராங்க
ஏழைமகன் நான் படிக்க
என்ன வாதி செஞ்சிட்டாங்க?
கைத்தொழிலு செஞ்சிட்டாலும்
கல்வி எனக்கு வேண்டாமோ?

காங்கிரசு ஆள வந்தா
கல்விச்சாலைப் பெருகு மின்னு
அந்தக் காலம் பேசிக்கிட்டு
அப்பாகூடச் சொன்னாரே!
வாரத்திலே மூணு நாளில்
வந்துசிலர் தான் படித்தால்
மத்த இரண்டு மூணுநாளில்
மத்த பேர்கள் படிக்கட்டுமே!

பாதிநாளில் படிப்புக் கத்து
பாதிநாளில் தொழிலுங் கத்து
அப்பாவுக்கு உதவி செய்து
அந்தத்தொழிலே நான் படிக்க
இப்படியா பேப்பருலே
எழுதிக்கிட்டு வராப் போலே
சர்க்காருங்க செஞ்சிட்டாக்க
தரித்திரமும் ஓடிப்போகும்

இடமில்லேன்னு கை விரிக்க
எட்டுமாஸ்டர் சொல்ல வேண்டாம்!
எல்லாப் பிள்ளையும் படிப்பதற்கு
இடமும் வேறே கட்டவேண்டாம்
மனமிருந்தா இட முண்டென்று
மாகாணத்து சர்க்காருங்க
ஷிப்டுமுறைக் கல்வி வைக்க
தேசமெல்லாம் பரப்ப வேணும்!

ராஜபாளையம்
5—12—49 வெள்ளைச்சாமிப் பாவலர்



படித்த நாட்டுப் பெண்ணைக் கோலம் போடச் சொன்னால்......!

## மட்டரக ஏற்றுமதி

நமது சர்க்கார் நாட்டின் ஏற்றுமதியை அதிகரிக்கத் திட்டமிடுவதாகத் தினப் பத்திரி கைகளில் பார்க்கிறோம். ஏற்றுமதி அதிகரிப்ப தால் நாட்டின் செல்வம் பெருகுவதுடன் விவ சாயத் தொழிலும் முன்னேற்ற மடையும். ஏற்றுமதியை அதிகரிப்பதில் அரசாங்கமும் வியாபாரிகளும் பரஸ்பரம் ஒத்துழைத்தால் தான் பலனேற்படும். இந்திய வியாபாரிகள் சுயநலத்தைக் கருதி கலப்புச் சரக்குகளை ஏற்றுமதி செய்து நம் நாட்டுப் பொருள்களின் மதிப்பைக் குறைத்து வருகிறார்கள். மேல் நாடுகளிலிருந்து வரும் பொருள்கள் உப யோகத்திற்கு உகந்ததாயும் கலப்பற்றதாயும் இருப்பதால்தான் நம்பிக்கையுடன் அதிகவிலை கொடுத்தும் வாங்கி உபயோகிக்கிறோம்.

சென்னையிலிருந்து பர்மாவுக்கு ஏற்றுமதி யாகும் கடலை எண்ணெய் தண்ணீர்க் கலப்புடன் மட்டரகமாயிருப்பதால் இந்திய எண்ணெய் பூராவும் மட்டரகமெனக் கருதுகிறார்கள். உணவுப் பொருள்கள் தாராளமாகக் கிடைக் காத நிலைமையில் மட்டரகமான பொருள் களையே ஜனங்கள் அருவருப்புடன் வாங்கி உபயோகிக்க வேண்டியிருக்கிறது.

இவ்வாறு நம் நாட்டு வியாபாரிகள் கீழ்த் தரமாக நடந்து கொள்வதால் வெளிநாடு களில் இந்தியப் பொருள்களின் கிராக்கி குறை வதுடன் இந்திய வியாபாரத்திற்கும் இழிவு ஏற்படுகிறது. நயமான பொருள்களாக அனுப்பி, தகுந்த விலை பெறுவதற்கு முயற்சித் தால்தான் நம்பிக்கையும் நன்மதிப்பும் ஏற் படும். வியாபாரமும் செழித்தோங்கும்.

இதற்கு நமது அரசாங்கம் தகுந்த நடவடிக் கைகள் எடுத்துக் கொள்ள வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

ரங்கூன்
10—11—49 கே. ஏ. வி. ஆழ்வார்

---

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ "சர்க்கார் ஒன்று; ஆளும்..." என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ டி. வி. வெங்கடசுப்ரமணியத்துக்கும், "மனமிருந்தால் இடமும் உண்டு" என்ற பாடலை எழுதிய ஸ்ரீ வெள்ளைச்சாமிப் பாவலருக்கும் ரூ. 12-8-0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

காரணமாகச் சரியாகக் கவனிக்கப் படவில்லை என்று கூறப்படுகிறது. ஒரே சர்க்காரில் இந்த இரட்டையாட்சி எதற்கோ தெரியவில்லை!

வருடம் முப்போகம் விளையும் இந்தப் பூமியில் ஏற்கெனவே மிராசுதார்கள் நெல் சாகுபடியை கண்டிரோல்கள் கொள்முதல் முதலிய ஹிம்சைகளுக்குப் பயந்து குறைத்து, கரும்பு, வாழை முதலிய பயிர்களை அதிகமாகப் பயிரிடுகிறார்கள். பயிரிடப்படும் நெல்லுக்கும் ஏன் இந்த அசிரத்தை என்பது புரியவில்லை. இது சாமி வரம் கொடுத்தும் பூசாரி தடுப்பது போலல்லவா இருக்கிறது!

தற்போது அநேகமாய் வாடிவிட்ட சம்பா நெற் பயிருக்கு உடைப்பு அடைத்து ஜலம் எதிர்பார்க்க முடியாது என்று தெரிந்து விட்டது. ஆகவே ஏதோ சிறிதளவாவது வாய்க்காலில் ஜலம் வர மேட்டூரிலிருந்து அதிக ஜலத்தை நதியில் விட்டு நதியில் ஜல மட்டம் உயர்ந்து உடைப்புகள் மூலமே வாய்க்காலில் ஜலம் விடப்பட்டால் கீழ் கிராமங்களுக்கு ஜலம் கிடைக்கலாமென்று தெரிய வருகிறது. அதாவது தாமதமான பலனை அளிக்கலாம்.

இந்தப் பிராந்திய ரயத்துகள் கணியாக ரூ. 30 கிஸ்தியும், பாசன செஸ் ரூ. 4-ம், செருவேட்டச் ஏற்பட்டது காரணமாய்ப் பத்து வருடத்திற்கு வருடம் ரூ. 4 வீதம் அபிவிருத்தி வரியும், போன வருடம் மராமத்துச் செலவு போதவில்லை என்று அதிகப்படி ரூ. 4 செல்லாம் ஒரு ஏகராவிற்கு கட்டுகிறார்கள். அவர்களுக்கு வாய்க்கால் ஜலம் கிடைக்க உரிமை உண்டு. ஜலமும் ஏராளமாய் இருக்கிறது. ஆனால் சாகுபடிக்கு ஜலம் இல்லை. இனியாவது சர்க்கார் கண்விழித்து வாய்க்கால் கரைகளைப் பலப்படுத்தி உணவு உற்பத்தியைச் செயலில் நடத்த உதவுவார்களா?

சேலம்
9—12—49 டி. வி. சிவசுப்பிரமணியன்

○●○

## அமெரிக்க விஜயம்

பத்திரிகைகளில் வெளியாகியிருக்கும் ஒரு டில்லிச் செய்தி எங்களுக்கு மிக வருத்தமளிக்கிறது. அச் செய்தி—நம் பிரதமர் ஜவாஹரின் அமெரிக்க விஜயத்தைப் பற்றியது. நேரு அவர்கள் தம்முடைய காரியதரிசி ஜெனரல், அந்தரங்கக் காரியதரிசி ஜெனரல், அந்தரங்கக் காரியதரிசி, வெளிநாட்டிலாக்கா உப காரியதரிசி முதலானவர்கள் மட்டும் சர்க்கார் செலவில் பிரயாணம் செய்ததாகவும், ஆனால் தம் அருந்தவப் புதல்வியின் பூரா செலவுகளும் சர்க்கார் செலவில் அல்ல வென்றும் ஒரு மெம்பர் கேட்ட கேள்விக்கு நம் நேரு பதில் தெரிவித்துள்ளார்கள்.

வெளிநாட்டு சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் மற்ற எந்த நாட்டுக்குச் சென்றாலும், அல்லது தம் நாட்டிலேயே பிரயாணம் செய்தாலும் அவர் மனைவி மக்கள், பேரன், பேத்தி, பியூன்கள், போட்லர்கள், காவலர்கள் மற்றும் பலருடன் விஜயம் செய்கிறார்கள். இவர்களெல்லாம் சொந்தச் செலவில் அல்ல. ஸ்ரீமான் பொதுஜன சர்க்காரின் செலவுதான். ஏன் நம் சகோதர பாக்கிஸ்தான் பிரதமர் தம் தர்ம பத்தினியுடன் சென்றிருந்தாரே பிரிட்டனுக்கு அது யார் செலவில்? தம் சொந்த ரூபாயை எடுத்து விஜைரா பேகம் அவர்கள்?

ஆனால் இன்று நம் அடிமை விலங்கை யறுத்து சர்வ தேசங்களுக்கும் சரிநிகராக நம் பாரத நாட்டைத் தலை நிமிரச் செய்து, நம்மையும் நம் குடும்பத்தையும் பாரத நாட்டின் விடுதலைக்கே தந்து வெற்றி பெற்ற மனிதருள் மாணிக்கத்தின் சுற்றுப் பிரயாணத்தின்போது தம் குமாரியைச் சர்க்கார் செலவில் அழைத்துப் போக சர்க்கார் சம்மதித்தால் என்ன? பாரதநாடே அழிந்து விடுமா? அல்லது பணப் புழக்கமே அற்று விடுமா?

ஆகவே, நம் நாட்டு ஏகப்பிரதிநிதியின் செல்வக் குமாரியின் அமெரிக்க விஜயத்தின் போது ஏற்பட்ட சகல செலவுகளையும் நம் சர்க்கார் ஏற்றுக் கொள்ள வேண்டும். லண்டனிலிருந்து அமெரிக்க ஜனாதிபதி தம் சொந்த விமானத்தில் நேரு குழுவினர்களை ஏற்றிச் சென்றாரே, அவர் நேருவின் குமாரிக்கு மட்டும் டிக்கெட் போட்டுப் பண வசூல் செய்தாரா? அப்படியிருக்க நாம் நம் நேருவின் குமாரியின் பிரயாணச் செலவை ஏற்காவிட்டால் அமெரிக்கா மட்டுமல்ல, எல்லா நாடுகளும் கைகொட்டிச் சிரிக்கும்.

ஆதலால் நம் சர்க்கார், நேருவே அச்செலவுகளைக் கொடுக்க முன் வந்தாலும் அதை ஏற்றுக் கொள்ள மறுக்க வேண்டும். அதுவே மிக்க புத்திசாலித்தனமும் நாட்டின் கௌரவமும் உயர வழியாகும்.

அருப்புக்கோட்டை
18—12—49 பி. ஜி. சாமி

○●○

## எஸ். ஐ. ஆர். கவனிக்குமா?

நெல்லை வாசியாகிய நான் எனது நண்பர் குடும்பத்துடன் சென்னைக்கு வந்து கொண்டிருந்தேன். தாம்பரம் சந்திப்பிலிருந்து மின்சார வண்டியின் மூலம் வருவதுதான், எங்கள் இருப்பிடமான தியாகராய நகருக்குக் குறுக்கு வழி. தாம்பரத்தில் வண்டி ஏறி மாம்பலம் ஸ்டேஷனுக்கு வருவதற்குள்ளாக வண்டியில் என் போட்டாலும் விழாத கூட்டம் கூடி விட்டது. இந்தக் கூட்டந்தான் எப்பொழுதும் நிரந்தரமாயிற்றே!

நானும் எனது நண்பரும் கூட்டத்தை ஒருவாறாக விலக்கிக் கொண்டு, வண்டி பிளாட்பாரத்தில் நின்ற உடனேயே இறங்கிக்கொண்டோம். நண்பரின் மனைவி கையில் வைத்திருந்த குழந்தையோடு இறங்க ஆயத்தமானாள். வண்டி பிளாட்பாரத்திற்கு வந்து ஒரு நிமிஷம் ஆகி யிராது; அதற்குள் கார்டு விசிலை ஊதி விட்டார். வண்டியும் நகர ஆரம்பமாயிற்று. பரபரப்போடு இறங்கிக் கொண்டிருந்த என் நண்பரின் மனைவி குழந்தையைக் கைவிட நேர்ந்தது. மறு கணம் குழந்தை பலமாக வீறிட்டுக் கொண்டு தண்டவாளத்தில் விழுந்தது. ஆயினும், பிரயாணிகளின் கூக்குரலினால், வண்டி அதே கணத்தில் நிறுத்தப்பட்டு, ஓரிரண்டு சிறு காயங்களுடன் குழந்தை உயிர் தப்பியது.

நண்பரின் மனைவி சென்னையில் வெகுகாலம் இருந்து பழக்கப்பட்டவள்தான். ஆனாலும், அந்தக் குறுகிய நேரத்திற்குள்ளாக, அவளால் குழந்தையைத் தூக்கிக் கொண்டு, வண்டியிலிருந்து இறங்க முடியவில்லை. அவள் மாத்திரமல்ல; தினந் தினம் பல பிரயாணிகள் எவ்வளவுதான் சீக்கிரமாக வண்டியின் ஏறவோ, வண்டியிலிருந்து இறங்கவோ பிரயத்தனித்தாலும், வண்டியையும் தவற விட்டுத் தங்களுடைய அவசரமான காரிய சித்தியை

# வட்ட மேஜை

## மகாத்மா ஸ்தூபி நிதி

சென்னைக் கடற்கரையில் கட்டுவதாகத் திட்டம் இட்டிருக்கும் காந்தி ஞாபகார்த்த ஸ்தூபியின் நிதிக்கு என்னுடைய காணிக்கை ரூ. 25 இத்துடன் அனுப்பியிருக்கிறேன். தமிழ் நாட்டின் தலைசிறந்த பொதுச் சின்னமாக இதைப் பாவித்து எல்லோரும் தங்கள் பங்கைச் செலுத்த முன் வருவார்கள் என்று நம்புகிறேன். குறிப்பாகக் கோவை ஜில்லாவாசிகள் வழக்கம்போல் பெருமை கொள்ளக் கூடிய முறையில் இந்தக் கைங்கரியத்துக்கு உதவ வேணுமாய்க் கோருகிறேன்.

கோயமுத்தூர் சுப்ரி
(கே. சுப்ரமணியம்,
19—12—49 எம். எல். ஏ.)

○●○

## இந்தியா சீனாவாகிறது!

சென்ற டிசம்பர் 11-ந் தேதி வெளியாகியிருந்த "சீனாவை நோக்குங்கள் சிந்தித்துப் பாருங்கள்" என்ற கட்டுரை முப்பது வருஷகாலமாகச் சீனாவின் ஒப்பற்ற தலைவராகவும் ஆசியாவின் முக்கிய புருஷராயுமிருந்த சியாங்-காய்-ஷேக் இன்று விலாசம் தெரியாத இடத்தில் இருப்பதின் காரணங்களை விளக்குகிறது. பசியால் வாடும் மக்கள் எதை வேண்டுமானாலும் செய்வார்கள். ஆகவே சீனாவின் கதி இந்தியாவுக்கு நேராமலிருக்க வேண்டுமானால் மக்கள் பசியைப் போக்க வேண்டும். இதைத் தான் தெள்ளத் தெளிவாகக் கூறுகிறது.

இன்று இந்தியாவில் காதில் விழுகின்ற கோஷங்களைக் கேளுங்கள்.

இந்தியா சீனாவாகிறது
காங்கிரஸ் கோமின்டாங் ஆகிறது
வங்கம் மஞ்சூரியாவாகிறது
அந்தமான் பார்மோஸாவாகும்

மேற்கண்ட கோஷங்களை உண்மையாக்கி விடக் கூடாது. நமது தலைவர்கள் அதற்குரிய காரியங்களைச் செய்ய வேண்டும். இல்லாவிடில் இன்று சிலரால் கோஷிக்கப்படும் மேற்கண்ட கோஷங்களை நாளை பலர் கோஷிப்பார்கள். அவ்விதம் கோஷிக்கப்பட்டால் இந்தியா சீனாவின் கதியைத்தான் அடைய முடியும்.

"எத்தனை கஷ்டங்கள் ஏற்பட்டாலும் பொறுத்துக் கொண்டு சர்க்காருடன் ஒத்துழைக்க வேண்டும்" என்று தலைவர்கள் கூறுவதால் அதிகப் பலன் ஏற்பட்டு விட முடியாது.

முதலாளித்துவ கொடுமையை ஒடுக்குவதன் மூலம் தேச நலனுக்குச் சிறந்த பாதகம் நேருவதாக இருந்தாலும் கூட சர்க்கார் அதைப் பொருட்படுத்தாமல் ஏழை மக்களின் கஷ்டத்துக்குக் காரணமாயிருப்பவர்கள் மீது தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும்.

நாட்டின் பெரும்பான்மை மக்களின் நலனுக்காக மக்களின் விரோதிகளான சிறுபான்மையோர் மீது நடவடிக்கை எடுப்பது ஜனநாயகத்திற்கு முரண்பாடன்று. அது ஜன நாயகத்தின் முக்கிய அம்சமும் ஆகும்.

சிவகிரி
12—12—49 எம். எம். சுவாமி

○●○

## ★ சர்க்கார் ஒன்று; ஆனால்....

நாமக்கல் தாலுக்காவில் ஜேடர் பாளையம் என்னுமிடத்தில் சர்க்கார் மராமத்து இலாக்காவால் ரூபாய் ஆறரை லக்ஷம் செலவில் சமீபத்தில் ஒரு பெட் ரெகுலேட்டர் (Bed regulator) கட்டினார்கள். அதன் மூலம் காவேரியாற்று ஜலம் ராஜன் வாய்க்கால் மூலம் 5,500 ஏக்கரா நஞ்சை சாகுபடிக்குப் பாய்ச்சப்பட்டு வருகிறது. வெகுகாலமாக மேற்படி இடத்தில் கோரம்பு மூலம் நீரை ஆற்றில் தேக்கி வாய்க்காலுக்குப் பாய்ச்சி சாகுபடி செய்யப்பட்டு வந்தது. காவேரியில் ஜலம் அடிக்கடி குறைந்தால் வாய்க்காலுக்கு ஜலம் வருவதில்லை என்றும் அதிக வெள்ளம் வந்தாலும் கோரம்பு அடித்துக் கொண்டுபோய் ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கான ரூபாய் நஷ்டமாகிறதென்றும் ரயத்துகள் புகார் செய்ததின் பேரில் சர்க்கார் ஆறரை லக்ஷம் ரூபாய் செலவில் ஐந்து அடி உயரமுள்ள ரெகுலேட்டரை கட்டி முடித்துள்ளனர்.

அணை மூலம் வாய்க்காலில் தேவைக்கு மேல் ஜலம் விடப்படுகிறது. ஆனால் வாய்க்கால் பல இடங்களில் ஆற்றுக்கு வெகு அருகிலேயே போவதாலும், முன்னரே வற்புறுத்தியும் வாய்க்கால் கரைகள் பலப்படுத்தப் படாததாலும் பல இடங்களில் உடைப்பெடுத்து வாய்க்கால் நீர் பெரும்பாகம் ஆற்றிற்குள்ளேயே திரும்பிப் போய்விடுகிறது. ஜேடர் பாளையத்திலேயே அணைக்கு ஒரு மைலுக்குக் கீழ் 300 அடி அகலம் உடைப்பெடுத்து அநேகமாய் வாய்க்கால் ஜலம் பூராவும் ஆடி முதல் (5 மாதங்களாக) ஆற்றிற்குள் போயும் இன்னும் உடைப்பு மூடப்படவில்லை. வாய்க்கால் பாசனத்தில் உள்ள நெல் விளையும் நிலங்களுக்கோ கரும்பு, வாழை, வெற்றிலை விளையும் நிலங்களுக்கோ போதிய ஜலமில்லை. அக்டோபர் நவம்பரில் மூன்று வாரங்களும் சமீபத்தில் 12 தினங்களாகவும் வாய்க்காலில் ஜலமே இல்லாமல் வறண்டிருக்கிறது. நெற்பயிர் வைக்கோல் புல்லாகி விட்டது. நஞ்சை, இடையாறு, பாலப்பட்டி, போன்ற கிராமக் குடிகள் முழு வரி வசூலுடன் ஏக்கர் ஒன்றுக்கு ரூ. 250 நஷ்ட ஈடும் கொடுக்க வேண்டுமென்று சர்க்காரிடம் மனுக்கள் அனுப்பியுள்ளனர்.

வாய்க்காலில் உடைப்புகள் அடைபடாதது பற்றி விசாரித்ததில் ஒரு விசித்திரத் தகவல் கிடைத்தது. பெட்ரெகுலேட்டர் மராமத்து இலாக்காவைச் சேர்ந்தது. ஆனால் வாய்க்கால்கள் ரெவினியூ இலாக்காவைச் சேர்ந்தவை. ரெவினியூ இலாக்காவின் கீழ் ஒரு டெபுடி தாசில்தாரும் வாய்க்கால் ஓவர்சியர்களும் வாய்க்கால் திட்டத்தைப் பராமரிக்கிறார்கள். இரு இலாக்காவினருக்கும் கூட்டுறவு இல்லாததுடன் அபிப்பிராய பேதம்

குழந்தையைத் தூக்கிக் கொண்டு அவள் திரும்பும் பொழுது சாமிநாதனும் கூடவே வந்தான். தெருவை யடைந்ததும் "பத்திரமாகப் போகிறாயா?" என்றான்.

அவன் குரலில் தொனித்த ஆதுரம் பிரேமாவின் உள்ளத்தை ஊடுருவிச் சென்றது. "உம்" என்று தலையை அசைத்து விட்டுத் துடிக்கும் மனதுடன் வீட்டை யடைந்தாள் பிரேமா. அங்கிருந்த மரத்தின் கிளையி லிருந்த குருவிகள் பட பட வென்று சிறகை அடித்துக்கொண்டு கூட்டுக்குள் சென்றன.

அந்த நிலவு காய்ந்த இரவு அவளுக்கு அளித்த துன்பத்தை ஆயுள் பரியந்தம் அவளால் மறக்க முடியாது. மறுநாள் அவள் தாயார் "ஏண்டி பிரேமா! உனக்குச் சாமிநாதனைப் பிடித்திருக்கிறதா? அப்பா உன்னை அவனுக்குக் கொடுக்கலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறார்" என்று கேட்டாள்.

அவள் சம்மதத்தைத் தெரிந்துகொண்டு சீக்கிரமே கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்துவிட்டார் அவளுடைய தகப்பனார்.

★

சந்திரன் உச்சியைத் தொட்டுவிட்டான். 'நடு நிசியாகி இருக்கும் போலிருக்கிறதே. ஒருவேளை வராமல் இருந்துவிடுவாரோ' என்று துடித்தாள் பிரேமா.

தூரத்தில் ஒரு ஸைக்கிள் மணி அடிக்கும் சத்தம் கேட்டது. அவரா? — ஸைக்கிள் மணியடித்த திசையில் தன் முழுக் கவனத்தையும் செலுத்தினாள் பிரேமா. ஆமாம்! அவரேதான். அவருடைய ஸைக்கிளின் மணி யோசைதான் அது. ஆனால் அப்பொழுதும் அந்தச் சந்தோஷத்தை அனுபவிக்க முடியாமல் சந்தேகம் வந்து குறுக்கிட்டது. வேறு யாராவதாக இருந்தால்?

தன் நம்பிக்கை நிராசையாகப் போகக்கூடாதென்று பிரேமா தன் இஷ்ட தெய்வங்களை யெல்லாம் வேண்டிக் கொண்டாள். அடுத்த நிமிஷம் கிரேன்று ஸைக்கிள் அவ் வீட்டுச் சமீபமாக வந்து நின்றது. பிரேமா கைப்பிடிச் சுவரின் மேல் குனிந்து தெருவை நோக்கினாள். அதே சமயம் சாமிநாதன் நிமிர்ந்து மாடியில் பார்த்தான். பொங்கிவரும் சந்தோஷத்தில் ஒரே பாய்ச்சலாகக் கீழிறங்கி பிரேமா தெருக் கதவைத் திறந்தாள்.

"என் பழைய சினேகிதன் ஒருவன் மதராசுக்கு வந்திருக்கிறான். அவனைப் பார்க்கப் போயிருந்ததில் நாழியாகி விட்டது" என்று தான் நேரங் கழித்து வந்ததற்குச் சமாதானங் கூறினான் சாமிநாதன்.

"அதனால் என்ன? முதலில் சாப்பிட வாருங்கள்" என்று கூறிப் பிரேமா அவசர அவசரமாக உள்ளே போய் இலையைப் போட்டாள்.

"நான் சாப்பிட்டாகிவிட்டது; சினேகிதனோடு ஹோட்டலில் சாப்பிட்டேன். நீ சாப்பிடு" என்றான் சாமிநாதன்.

பிறகு பிரேமா பறந்து பறந்து படுக்கையைத் தட்டிப் போட்டாள். "எனக்குத் தூக்கம் வரவில்லை. சற்றுப் பொறுத்துப் படுத்துக் கொள்ளுகிறேன்" என்று கூறி விட்டுச் சாமிநாதன் வெளி மாடிக்கு வந்தான். பிரேமாவுக்கு, சாமிநாதனின் செய்கை யொன்றும் புரியவில்லை. அவள் மனதிலிருந்த சந்தேகம் பரிபூரணமாக நீங்கவுமில்லை.

"என்பேரில் உங்களுக்கு ஏதாவது கோபமா?" என்ற குரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான் சாமிநாதன். அந்தக் குரலில் இருந்த குழைவை அவன் என்றுமே கேட்டதில்லை.

"கோபமா? எதற்காகக் கோபம், பிரேமா?" என்று அவள் தோளில் கை வைத்துக் கேட்டபொழுது பிரேமாவுக்கு என்ன மறுமொழி கூறுவதென்று தெரியவில்லை.

---



ஒருத்தி:—என்னடி! இந்த வருஷம் எப்படி? இந்தத் தேன் கூடு நிறையத் தேன் கொடுத்ததா?

மற்றவள்:—இந்த வருஷம் தேன் அதிகம் கிடைக்கா விட்டாலும் என் மாமியாரை இரண்டு, மூன்று தடவை தேனீ கொட்டி விட்டது!

டன் மன்றாடி, குழாயடியில் போராடிச் சமையலறைக்குள் புகுந்தபோது மணி ஏழுமரை யாகிவிட்டது. அதற்கு மேல் அவள் எவ்வளவு பறந்தும் சமையல் சீக்கிரம் ஆகவில்லை. மணி ஒன்பதரையான வுடன் சாமிநாதன் குளித்துவிட்டுச் சாப்பாட்டுக்குத் தயாராக உள்ளே வந்தான். பிரேமா இலை போடுவதற்குப் பதிலாக "ஒரு நிமிஷம் இருங்கள். அடுப்பிலிருக்கும் குழம்பை இறக்கிவிட்டு இலை போடுகிறேன்" என்று மிகவும் பணிவுடன் கேட்டுக் கொண்டாள். சாமிநாதன் திரும்பிப் போய்விட்டான். பிறகு மணி ஒன்பதே முக்காலுக்கு "இலை போட்டுவிட்டாயா?" என்று கேட்டபடியே உள்ளே வந்தான். அங்கே தரையில் கொதித்தோடி வரும் குழம்பைக் கண்டவுடன் அவனுக்குக் கோபம் வந்துவிட்டது. "என்ன இது, பிரேமா? இன்று சோற்று வாயில் மண் போட்டுவிட்டாய் போலிருக்கிறதே!" என்று கேட்டான்.

பிரேமாவுக்குக் கோபம் வந்துவிட்டது. காலையில் எழுந்து இவ்வளவு கஷ்டப் பட்டுவிட்டுக் கடைசியில் இந்த வார்த்தை கேட்க நேரிட்டதே என்று வருத்தமாயிருந்தது அவளுக்கு. "நான் ஒன்றும் உங்கள் சோற்று வாயில் மண்ணைப் போடவில்லை. நன்றாகச் சமைத்துப் போடத்தான் நினைத்தேன். கை தவறி விட்டால் யார் என்ன செய்ய முடியும்?" என்று கடக் கடப் பதில் கொடுத்தாள். ஆனால் அவள் வார்த்தையை முடிக்கு முன்பே சாமிநாதன் "மண் இல்லாமல் இது பின் என்னவாம்? காலையில் பண்ணுவதே ஒரு குழம்பும் சோறும். அதையும் நேராகப் பண்ணத் துப்பு இல்லாமல் கீழே கொட்டிக் கவிழ்த்திருக்கிறாய்! பேச்சுத்தான் பிரமாதமாக வருகிறது!" என்று சொன்னவாறே இலை முன் அமர்ந்தான். பிரயாசமாக வந்த அழுகையை அடக்கிக்கொண்டு பிரேமா ஏதோ பரிமாறினாள். சாமிநாதன் இரண்டு நிமிஷத்தில் சாப்பாட்டை முடித்துக் கொண்டு சைக்கிளை எடுத்துக்கொண்டு போயே போய்விட்டான்.

அன்று மத்தியானம் எல்லாம் பிரேமா மிகுந்த வருத்தத்துடன் தன் வேலையைக் கவனிக்கத் தொடங்கினாள். மாலை வெகு நேரமாகியும் சாமிநாதன் வீடு திரும்பாமல் போகவே, தான் செய்த அந்தத் தவறுக்காகத்தான் அவர் இன்னும் வீடு வர மனமில்லாமல் இருக்கிறார் என்று தீர்மானித்தாள். 'பகவானே! ஏன் அப்படிப் புத்தி இல்லாமல் நடந்து கொண்டேன்' என்று தன்னையே நொந்து கொண்டாள்.

பொழுது ஏற ஏறத் தெருவில் ஜன நடமாட்டம் குறைந்து வந்தது. பத்து நிமிஷத்துக்கு ஒரு ரிக்ஷாவும் அரை மணிக்கொரு ஜட்காவும் போய்க்கொண்டிருந்தன.

★

பிரேமாவின் தகப்பனார் கும்பகோணம் டவுன் ஹைஸ்கூலில் ஒரு உபாத்தியாயர். அவருக்குப் பிரேமா மூத்த பெண். அவளுக்குக் கீழ் ஐந்தாறு குழந்தைகள் உண்டு. பிரேமாவுக்குப் பதினாறு வயது ஆனவுடன் அவள் தந்தை அவளுக்கு வரன் தேட ஆரம்பித்தார். ஆனால் பதினெட்டு வயது முடிந்துங்கூட ஒரு வரனாவது சரியாகக் கிடைக்கவில்லை. அவளுக்கென்று ஒரு பிள்ளை பூமியில் பிறந்திருக்கிறானா இல்லையோ என்ற சந்தேகம் கூட எல்லோருக்கும் வந்துவிட்டது.

அப்பொழுது அவ்வூருக்குப் புதிதாக ஒரு போஸ்ட்மாஸ்டர் வந்தார். அவர் பிரேமாவின் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் குடியேறினார். அவரும் நிறைய குழந்தைகள் உடையவர். ஸ்கூல் மாஸ்டர் வீட்டுக்கும் போஸ்ட்மாஸ்டர் வீட்டுக்கும் சிநேகப், போக்குவரத்து ஏற்பட்டு இரண்டு வீட்டாரும் வெகு சீக்கிரத்தில் அன்னியோன்னிய சிநேகிதர்களாகி விட்டனர். போஸ்ட்மாஸ்டரின் மைத்து



கடைக்காரர்:—என்னய்யா! இப்படி ராவண வேஷம் போட்டுக் கொண்டு வந்துவிட்டீர்?

வேஷக்காரர்:— தலைக்கு அரை வீசை சர்க்கரைதான் என்று நீங்கள் சொன்னீங்களே! இப்ப பத்துத் தலைக்கும் ஐந்து வீசை சர்க்கரை கிடைக்குமல்ல!



தரகன் :—உம்முடைய பிள்ளைக்குத் தகுந்த பெண் பார்த்திருக்கிறேன். பெண் பார்க்கக் கிளியாட்டமா இருக்கு. டான்ஸ் ஆடறது, பாட்டுப் பாடறது, பி.ஏ. வரை படிச்சிருக்கு, லேடீஸ் கிளப் செகரடரி வேறே, பையனுக்கு ஏற்ற பெண்... முடித்துக் கொள்ளுங்கள்!

பையனின் தகப்பனார்:—நீங்கள் சொல்கிறது எல்லாம் நன்றாகத்தான் இருக்கு. ஆனால் என் பிள்ளையாண்டானுக்குச் சமையல் பண்ணத் தெரியாதே! என்ன செய்கிறது?

---

ன் சாமிநாதன். ஸ்கூல் பைனல் பாஸ் பண்ணி இன்னும் சில சின்னப் பரீட்சைகள் எழுதிவிட்டு வேலைக்காகக் காத்துக் கொண்டிருந்தான். சாமிநாதன் பெரிய சங்கீதப் பிரியன். அவனுக்கு நன்றாகப் புல்லாங்குழல் வாசிக்கத் தெரியும். பொழுது போக்காக அடிக்கடி அவன் குழல் வாசிப்பது வழக்கம். குழலோசை எழுந்தவுடனேயே பிரேமாவின் தம்பி இரண்டு வயதுள்ள ராஜு பக்கத்து வீட்டுக்குப் போக வேண்டுமென்று துடியாய்த் துடிப்பான். உடனே அவன் தாயார் பிரேமாவைக் கூப்பிட்டு "பிரேமா! குழந்தை, புல்லாங்குழல் கேட்க ஆசைப்படுகிறான். கொண்டு போய்ப் பக்கத்து வீட்டில் விட்டுவிட்டு வா" என்று கூறுவாள். உடனே பிரேமா குழந்தையை இடுப்பில் தூக்கிக்கொண்டு போய் போஸ்ட்மாஸ்டர் வீட்டில் விட்டு விட்டு வருவாள். பிறகு கச்சேரி முடிந்ததும் சாமிநாதனே ராஜுவைக் கொண்டு வந்து வீட்டில் விட்டுவிடுவான்.

நாளடைவில் சாமிநாதனின் குழலோசை ராஜுவைக் கவர்ந்தது மட்டுமில்லாமல் பிரேமாவின் உள்ளத்தையும் கவர்ந்து விட்டது. அவள் மனதில் இன்பக் கனவுகள் காண ஆரம்பித்தாள்.

ஒரு நாள் இரவு வெகு நேரமாகியும் ராஜு திரும்பி வரவில்லை. பிரேமாவின் தாயார் தன் வேலைகளையெல்லாம் முடித்துக் கொண்டு வெற்றிலைத் தட்டைக் கையில் எடுத்துக்கொண்டு முற்றத்தில் வந்து அமர்ந்தாள். வெற்றிலையை மடித்துத் தன் கணவனுக்குக் கொடுத்துத் தானும் போட்டுக் கொண்டாள். பிறகு ஏதோ நினைத்துக் கொண்டவளாய், "ஏண்டி பிரேமா! ராஜுவைக் காணோமே; இன்னமுமா அடுத்த வீட்டில் இருக்கிறான்?" என்று பிரேமாவைப் பார்த்துக் கேட்டாள்.

"ஆமாம், அம்மா! அங்கேதான் இருக்கிறான்" என்றாள் பிரேமா.

"நாழி யாகிவிட்டதே! குழந்தைக்குத் தூக்கம் வந்துவிடுமே!" என்று சொன்னவாறே அந்த அம்மாள்—குழந்தையை எடுத்துக் கொண்டுவரப் புறப்பட்டாள். அதற்குள் பிரேமா "நானே போய் அழைத்துக் கொண்டு வருகிறேன் அம்மா! நீ இரு" என்று சொல்லிவிட்டுச் சரேலென்று எழுந்து போனாள்.

அன்று பௌர்ணமி யாகையால் நிலவு பாலைப் பொழிந்து கொண்டிருந்தது. வீட்டு வாசலிலிருந்த தென்னை மரத்தின் கீற்றுக்கள் நிலவில் வெள்ளி வாள் போல் மின்னின. இரண்டு குருவிகள் ஒரு கிளையில் அமர்ந்து கொண்டு அதன் பாஷையில் ஏதோ பேசிக் கொண்டிருந்தன. பிரேமா வாசலில் இறங்கி அடுத்த வீட்டை யடைந்த பொழுது கதவு திறந்திருந்தது.

உள்ளே போஸ்டு மாஸ்டர் அவர் சம்சாரம் குழந்தைகள் எல்லாரும் தூங்கிப் போய் விட்டனர். எங்கும் நிசப்தமாக இருந்தது. 'ராஜு' என்று கூப்பிட நினைத்த பிரேமா எல்லாரும் தூங்குவதைப் பார்த்துச் சத்தம் செய்யாமல் மாடிப்படி ஏறினாள். அங்கே மேன் மாடியில் ஒரு ஜமக்காளத்தின் மேல் சாமிநாதன் ஏதோ சிந்தித்தவாறு உட்கார்ந்திருந்தான். ராஜு அவன் மடியில் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். சாமிநாதன் வாசிக்கும் புல்லாங்குழல் ராஜுவின் கையில் இருந்தது. தானும் சாமிநாதனைப் போல் குழல் வாசிக்க முயற்சி செய்தான் போலிருக்கிறது.

பிரேமா வந்தவுடன் சாமிநாதன் திடுக்கிட்டு "பிரேமா!" என்றான்.

"ராஜு தூங்கிப் போய்விட்டானா?" என்று கேட்டாள் பிரேமா.

சாமிநாதன் "ஆமாம். பாட்டு கேட்டபடியே அயர்ந்து தூங்கிப் போய்விட்டான். அவனை எழுப்பவேண்டுமே என்றுதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்" என்று கூறினபடியே பிரேமாவை நிமிர்ந்து பார்த்தான் சாமிநாதன்.

சாரதாவின் மாமனார் அவளுக்கு ரகப்பட்ட பட்டுப் புடவைகள் வாங்கிக் கொடுத்திருந்தார். இருந்தும் சாரதாவுக்கு அந்தப் பச்சைக் கலர்ப் புடவையை வாங்கிவிட வேண்டுமென்று தோன்றிவிட்டது. தாயாருக்குக் காட்டாமல் புடவையை வாங்க இஷ்டப்படவில்லை வேங்கடராமன். சாரதா பார்த்தால் வாங்கச் சம்மதப்பட மாட்டாள் என்று சொன்னான். ஆகவே, அவன் சாரதாவின் மனம் கோணாமல் புடவையைப் பணம் கொடுத்து வாங்கிவிட்டு, தன் தாயாரிடம் பட்டுப்புடவை வாங்கியதற்கு ஏதோ சாக்குப் போக்குச் சொல்லி விட்டான்.

சாரதா 'மாமியாரிடம் போயும் பட்டுப் புடவை திரும்பி வந்ததே' என்று வெகு சந்தோஷத்துடன் அதைப் பீரோவில் பத்திரமாய் வைத்துப் பூட்டினாள். இரண்டு நாள் கழித்து மாமியார் சாரதாவைப் பார்க்க வந்தார். மாமியாரைப் பார்த்த உடனேயே சாரதாவிற்கு வயிற்றில் 'பகீ'ரென்றது. கட்டிக் கொள்ளாமல் பீரோவில் வைத்திருக்கும் புடவையை மாமியார் திருப்பி எடுத்துக்கொண்டு போய்விடுவாளோ என்று பயந்தாள்.

"ஏண்டி சாரதா, உன் புருஷனைப் போன்ற ஒரு பிள்ளையை நான் பார்த்ததே இல்லை! நீ கட்டிக்கொள்ளப் புடவையே இல்லை என்று ஏதாவது நல்ல நால் புடவையாய்ப் பார்த்து வாங்கிக்கொண்டு வரச் சொன்னாயாம். கடைக்குப் போய்ப் பார்த்தானாம். அந்தப் பச்சைக் கலர்ப் பட்டுப் புடவையைப் பார்த்து, உன் உடம்பிற்கு ஒத்திருக்கும் என்று வாங்கிக் கொண்டுவந்து விட்டானாம்! வாங்கிக் கொண்டுவந்த பிறகு நான் என்ன சொல்கிறது? இந்த அசட்டுப் பிள்ளை இப்படிப் பண்ணிவிட்டதே என்று நேற்று நானும் உன் மாமனாரும் கடைக்குப் போய் இந்த இரண்டு நால் புடவைகளை வாங்கிக் கொண்டு வந்தோம். இந்தா, இந்தப் புடவைகளை எடுத்து உள்ளே வை. நீ குழந்தைக்காரி. பட்டுப் புடவையை நாள் கிழமைக்குக் கட்டிக் கொள்ளலாம். அதை வீணாக்காதே!" என்று சொல்லி, புடவைப் பொட்டணத்தை மாட்டுப் பெண்ணிடம் கொடுத்தாள். சாரதா ஒன்றும் புரியாமல் ஆச்சரியத்தில் மூழ்கிப் போய் நின்றாள். ஆனால் அவள் மாமியார் மயிலாப்பூரைப் பார்க்கப் புறப்பட்டு விட்டாள்.

## வந்தார் வெளியே!





கடன் கொடுத்தவர்:—ஏன் அம்மா, உன் அப்பா வீட்டில் இருக்கிறாரா?

பெண்:—இல்லை; வெளியே போயிருக்கிறார்!

கடன் கொடுத்தவர்:—அடாடா! இந்தக் கொட்டுகிற மழையில் எந்த முட்டாளாவது வெளியே போவானா?

கடன் வாங்கியவர் (வெளியே வந்து):—ஏன் ஐயா! நீர் முட்டாளா, நான் முட்டாளா? நீர் அல்லவா இந்தக் கொட்டும் மழையில் வந்திருக்கிறீர்!




# என்மேல் கோபமா?

அம்புலு

சென்னை லிங்கச் செட்டித் தெருவில் சாமிநாதனும் பிரேமாவும் தங்கள் புதுக் குடித்தனத்தை ஆரம்பித்தனர். அவர்கள் குடி புகுந்த வீட்டில் எத்தனை குடித்தனங்கள் இருந்தனவோ, தெரியாது. ஆனாலும் எப்போதும் நூறு பேருக்குக் குறையாமல் அந்த வீட்டில் இருப்பார்கள். குழந்தைகள் அதைப் போல் மூன்று மடங்கு! சதா அந்த வீடு ஒரு கல்யாண வீடுபோல் கலகல என்று இருக்கும். சண்டை சச்சரவு, சிரிப்பு விளையாட்டு, பாட்டு கூத்து எல்லாம் நிறைந்திருக்கும். கீழே மூன்றாவது கட்டில் ஒரு சிறு சமையல் அறையும், இரண்டாவது மாடியில் ஒரு படுக்கையறையும் சாமிநாதனைச் சேர்ந்தவை. வீட்டின் மூன்றாவது மொட்டை மாடி எல்லோருக்கும் பொது.

சாமிநாதனுக்கு ஒரு கம்பெனியில் வேலை. காலை பத்து மணிக்கு ஆபீஸுக்குப் போய் மாலை ஐந்து மணிக்குத் திரும்புவான். அவனிடத்தில் ஒரு ஸைக்கிள் இருந்தது. அதைக் கொண்டு தன் பிரயாண அலுவல்களைக் கவனித்துக்கொள்ள அவனுக்குச் சௌகரியமாக இருந்தது.

அன்று மாலை சாமிநாதன் வழக்கம் போல் ஐந்து மணிக்கு வீட்டுக்கு வரவில்லை. மணி ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது என்று ஆகியும் அவன் வரவில்லை. பிரேமா தவியாய்த் தவித்தாள். குடியிருப்பவர்கள் அனைவர் வீட்டிலும் சாப்பாடு முடிந்து படுக்கையாகிவிட்டதால் வீட்டில் சந்தடி அடங்கிப் போய்விட்டது. பிரேமாவுக்கு உள்ளே கால் தரிக்கவில்லை. வெளி மாடிக்குப் போய்க் கைப்பிடிச் சுவரில் சாய்ந்து கொண்டு தன் கணவன் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அன்று பௌர்ணமி யாகையால் நிலவு பால்போல் காய்ந்து கொண்டிருந்தது.

நாழி ஆக ஆக, அன்று காலை நடந்த சம்பவம் நினைவுக்கு வந்தது. அதன் விளைவாகத்தான் அவர் இன்னும் வீட்டுக்கு வராமலிருக்கிறாரோ என்று தோன்றிற்று பிரேமாவுக்கு.

அன்று காலையில் சற்றுத் தாமதமாக எழுந்திருந்தாள் பிரேமா. ஐந்து மணிக்கு எழுந்திருப்பவள் தூங்கிப் போய் ஆறு மணிக்கு எழுந்தாள். பிறகு பால்காரனு



பாகவதர் (ரஸிகரிடம் பாடிக் காட்டுகிறார்):—"நல்ல சமயமடா! இதை நீ நழுவ விடுவாயோ......!"

---

தாயார். அவனுக்கு எந்தப் பெண்ணைப் பார்த்தாலும் பிடிக்கவில்லை. கடைசியில் சாரதாவைத் தேடிப் பிடித்தாள்.

வேங்கடராமனுக்குக் கல்யாணமாகி ஐந்து வருஷங்கள் ஆகிறது. மூன்று குழந்தைகளுக்குத் தகப்பனாராகி விட்டான். குழந்தைகள் என்னமோ, மூன்று பிறந்து விட்டனவே தவிர, சம்பளத்தில் ஒன்றும் உயர்வு காணவில்லை. வேலைக்குப் போன அன்று வாங்கிய சம்பளம்தான் இன்றும் வாங்கிக் கொண்டிருக்கிறான். தகப்பனாருடன் இருந்ததால் எப்படியோ கஷ்டம் தெரியாமல் குடும்பம் நடந்து வந்தது.

சாரதாவிடம் அவன் மாமியார் எவ்வளவோ அன்பாய் இருந்தாள். சாரதாவுக்கு என்னமோ மாமியாரைக் கண்டாலே பிடிக்கவில்லை. மாமியாரை எதிரில் ஒன்றும் சொல்ல முடியாததால், கணவனிடம் சதா ஏதாவது மாமியாரைப் பற்றிக் குறை கூறிக்கொண்டே இருப்பாள். அதோடு கொஞ்ச நாளாகத் தனிக் குடித்தனம் பண்ண வேண்டுமென்ற ஆசையும் தோன்றிவிட்டது சாரதாவுக்கு. இந்த நூற்றிருபது ரூபாயில் மூன்று குழந்தைகளை வைத்துக் கொண்டு சம்சாரம் செய்ய முடியும் என்ற எண்ணத்தோடு, மாதம் குறைந்தது பத்து ரூபாயாவது மிச்சம் பிடிக்க முடியும் என்றுகூட நினைத்தாள் சாரதா. கணவனிடமும் தனிக் குடித்தனம் போக வேண்டுமென்பதை ஜாடையும் மாடையுமாகத் தெரியப்படுத்தினாள் சாரதா.

வேங்கடராமனுக்குத் தாயாரைவிட்டுப் போக மனம் வரவில்லை. ஆனால் நாளுக்கு நாள் மனைவியின் தொந்தரவு பொறுக்க முடியாமல், "அப்பா, மயிலாப்பூரிலிருந்து கிண்டிக்குப் போய் வர தினம் கஷ்டமாய் இருக்கிறது. உடம்பு ரொம்பவும் களைத்துப் போய் விடுகிறது. இந்த வீட்டை விற்று விட்டு மாம்பலத்தில் ஒரு பங்களா வாங்கிக் கொண்டால் என்ன?" என்று பேச்சோடு பேச்சாக ஒரு நாள் தகப்பனாரிடம் சொல்லிவைத்தான் வேங்கடராமன். அவன் நிலைமையை ஒருவாறு புரிந்து கொண்டார் தகப்பனார். மிகுந்த பிரயாசைப் பட்டு மாம்பலத்தில் ஒரு வீட்டைப் பார்த்துப் பிள்ளையையும் நாட்டுப் பெண்ணையும் அனுப்பி வைத்தார். வேங்கடராமனும் சாரதாவும் மாம்பலத்தில் குஷாலாய்க் குடும்பம் நடத்தி வந்தார்கள்.

வேங்கடராமன் வாரத்திற்கு ஒரு முறை தகப்பனாரைப் போய்ப் பார்த்து வந்தான். வரும்பொழுதெல்லாம், பிள்ளை கஷ்டப்படப் போகிறானே என்று ஐந்தும் பத்துமாய்ப் பணம் கொடுத்து வந்தாள் அவன் தாயார். அடிக்கடி மாமியாரும் மாம்பலம் வந்து மாட்டுப் பெண்ணைப் பார்த்துக்கொண்டிருந்தாள். மாம்பலம் வரும்பொழுதெல்லாம் அப்பளாம், கண்டைக்காய் வற்றல், அது இது என்று ஏதாவது கொண்டு வராமல் இருக்க மாட்டாள். இவ்வளவு செய்தும் சாரதாவுக்கு மாமியாரின் மேல் நல்லெண்ணம் விழவில்லை. 'ஏன் மாமியார் இப்படி அடிக்கடி வந்து பிராணனை வாங்குகிறாள்?' என்றுதான் தோன்றிற்று. மாமியார் மாம்பலம் வந்து விட்டுப் போனால் அன்று கணவன் மனைவிக்குள் ஏதாவது சண்டை நடக்காமல் இராது!

"இதோ பாருங்கள்! [illegible] சொல்கிறேன் என்று கோபித்துக் கொள்ளாதீர்கள். உங்கம்மாவைப் பற்றி நான் என்னமோ என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அவர் எவ்வளவு கேள்விகள் கேட்கிறார் தெரியுமோ? 'ஏண்டி, உனக்கு மாதம் எத்தனை வீசை சர்க்கரை பிடிக்கிறது? தினம் கரி அடுப்பிலா சமையல் செய்கிறாய்? ஏன் விறகே வாங்குகிறதில்லையா?' என்று எத்தனை கேள்விகள் கேட்கிறார்! நான் என்ன அப்படிக் கொட்டி அழித்தா குடித்தனம் பண்ணுகிறேன்? வாரம் ஒரு முறை இங்கு வந்து வேவு பார்க்காவிட்டால் அவருக்குப் பொழுது போகிறதில்லை போலிருக்கிறது?" என்று ஆத்திரமாய்ப் பேசுவாள் சாரதா.

"ஆமாம். அவள் பேரில் தப்புச் சொல்லாவிட்டால் உனக்குத் தூக்கம் வராது? வீட்டுக்குப் பெரியவளாக இருப்பவள் இதெல்லாம் கேட்காமல் இருப்பாளா? அவள் எது கேட்டாலும் நீ ஏன் தப்பாய் அர்த்தம் செய்துகொள்கிறாய்?" என்று சாரதாவைவிட உரக்கக் கத்துவான் வேங்கடராமன். இதைப் போன்ற சண்டை வேங்கடராமனின் வீட்டில் அடிக்கடி நடைபெறுவதுண்டு.

அங்கதன் : இந்து வின்று நின்று இமிர்ந்தனதாம் என வந்து : ஒரு பூரண சந்திரன் வானத்தில் இருந்து பூமியில் வந்து இறங்கியதாம் என—வந்து (அங்கதன் நிறம் வெண்ணிறம்); வீரன் அடியின் வணங்கினான் : ராமனது பாதத்தில் விழுந்து வணங்கினான்.

குறிப்பு :—அங்கதன் வருகையை ஆத்திரத்தோடு எதிர்பார்த்திருந்தவர் கண்ணுக்குச் செய்யுளிற் சொன்னபடி தோற்றம் அளிக்கத்தானே செய்யும்.]

* * *

ஆத்திரத்தோடுதான் எல்லாரும் இருக்கிறோம். நம்மைவிட ஆத்திரம் ராமபிரானுக்குத்தான்.

அங்கதன் வந்து சேர்ந்ததும் "அந்த அரக்கன் இருக்கிறானே, அவன் என்ன கருத்தோடு இருக்கிறான் சொல்லு?" என்கிறான் ராமன்.

உற்ற போ(து), 'அவன்
உள்ளக் கருத்தெலாம்'
கொற்ற வீரன்
'உணர்த்'தென்று கூறலும் ;
'முற்ற ஓதினென் !—
மூர்க்கன்மு டித்தலை
அற்ற போதன்றி
ஆசைஅ றான்'என்றான்.

[உற்றபோது : அங்கதன் திரும்பி வந்து சேர்ந்ததும் ; அவன் உள்ளக் கருத்தெலாம் : அந்த ராவணனுடைய அபிப்பிராயத்தை எல்லாம் ; கொற்ற வீரன் உணர்த்து என்று கூறலும் : வெற்றிக்கே உரிய வீரம் படைத்த ராமன், சொல் என்று சொல்லவும் ; அங்கதன் சொல்லுகிறான் :—

முற்ற ஓதி என் : ராவணனுடைய அறிவீனத்தை எல்லாம் எடுத்துச் சொல்லுவதால் என்ன பிரயோஜனம் ; மூர்க்கன் முடித்தலை : அந்த மூர்க்கனது கிரீடம் சூட்டிய தலை இருக்கிறதே அது ; அற்ற போதன்றி ஆசைஅறான் என்றான் : அற்றுத் தரையில் விழுந்தால் அன்றி அவனது துராசை அவனை விட்டுப் போகாது.]

அங்கதன் தூதுபோன காரியம் இப்படி முடிகிறது.

அடுத்தாற்போல் செய்யவேண்டிய காரியம் இன்னது என்பதைச் சொல்ல வேண்டாம்தானே ?

## பயம் ஏன்?




விவசாயிகளின் நன்மைக்கான நீர்ப்பாசனம் முதலிய திட்டங்களை நடத்தும் பொருட்டு மூலதனம் சேர்ப்பதற்காகச் சென்னை சர்க்கார் கட்டாயக் கடன் திட்டம் ஒன்றை வெளியிட்டார்கள். (ஐந்து வருஷத்தில் வட்டியுடன் திரும்பி வரும் கடன்தான்!) ஆயினும் அத்திட்டம் விவசாயிகளை ரொம்பவும் பயமுறுத்தி விட்டிருக்கிறது !




# வேண்டாத மாமியார்

ராஜன்

"என்ன உங்க அம்மாவுக்கு அந்த பச்சைக் கலர்ப் புடவை பிடித்திருக்கிறதா? வாங்கலாமென்று சொன்னாரா?" என்று பத்திரிகை படித்துக் கொண்டிருந்த வேங்கடராமனைப் பார்த்துக் கேட்டாள் அவன் மனைவி சாரதா.

வேங்கடராமன், "நன்றாய் இருப்பதாகச் சொன்னாள். ஆனால்......" என்று சற்று இழுத்தாற்போல் நிறுத்தினான்.

"ஆனால் என்ன? 'எதற்காகத் தண்டத்திற்கு நூறும் நூற்றிருபதும் போட்டுப் பட்டுப் புடவை வாங்குகிறாய்? அவள் குழந்தைக்காரி. நல்லதாக இரண்டு நூல் புடவைகள் வாங்கிக் கொடு' என்று சொன்னாரோ உங்கள் அம்மா?" என்று கடுகடுப்புடன் கேட்டாள்.

"அப்படிச் சொல்லவில்லை. 'பட்டு விலை ரொம்பவும் ஏறிப் போயிருக்கிறதே, இரண்டு மாதம் கழித்து வாங்கிக் கொள்ளக் கூடாதோ?' என்று சொன்னாள்" என்றான் வேங்கடராமன்.

"ஆமாம். நாம் பத்துப் புடவை வாங்குகிறது எடுபட்டுப் போகிறதே! இதற்குப் பட்டு விலை இறங்கவேண்டும், போங்களேன்! உங்கள் அம்மாவுக்குப் பட்டுப் புடவை வாங்குவதில் இஷ்டமில்லை என்று சொல்லுங்களேன். எதற்காகச் சுற்றி வளைத்துக்கொண்டு பேசுகிறீர்கள்?"

"அம்மா சொல்கிறமாதிரி இந்த மாதம் ஒரு நூல் புடவை வாங்கிக் கொள்ளேன். அடுத்த மாதம் பட்டுப் புடவை வாங்கிக் கொள்ளலாமே?" என்றான் வேங்கடராமன்.

"ஆமாம். என் புத்தியைச் சொல்லுங்கள்! வெட்கங்கெட்டுக் கேட்டேனே? எதற்கும் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா?" என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டே வீட்டுக்குள்ளே போனாள் சாரதா.

வேங்கடராமனின் தகப்பனார் ஒரு ரிடயர்ட் தாசில்தார். மயிலாப்பூரில் சொந்த வீடு கட்டிக்கொண்டிருந்தார். அவருக்கு மொத்தம் மூன்று பிள்ளைகள். மூத்த பையன் பம்பாயில் வேலையில் இருந்தான். இரண்டாவது பையன்தான் வேங்கடராமன். மூன்றாவது பையன் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தான். வேங்கடராமன் கிண்டியில் ரத்தப் பரிட்சை பண்ணும் ஆபிஸில் ஒரு குமாஸ்தா. மாதம் நூற்றிருபது ரூபாய் சம்பளம். வேங்கடராமன்தான் தாயாருக்கு ரொம்பவும் பிடித்தமானவன். அவன் கல்யாணத்திற்குக் குறைந்தது இருபது பெண்ணையாவது போய்ப் பார்த்து விட்டு வந்திருப்பான் அவன்

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி

## 278. தலைபோனால் ஆசைபோகும்!

அங்கதன் ராவணனை வெகு கேவலமாகப் பேசி விட்டான். அதற்காக அவன்மேல் நாலு அரக்கர்களை ஏவினான் ராவணன்.

பிடிக்க வந்த அரக்கர்களைக் குடுமியைப் பிடித்த வண்ணமாகத் தாவித் தாவிப் பாய்ந்து கோபுர வாசலை அடைந்தான். அவர்களைக் கீழே வீசி எறிந்து மிதி மிதி என்று மிதித்தான். இதெல்லாம் காரணமாக அவன் மார்பில் இரத்தம் பட்டு ஒரே சிவப்பாய் இருந்தது.

கோபுர வாசலில் பல அரக்கர்கள் வந்து கூடி நின்றார்கள். பயந்த வண்ணமாய் நின்றார்கள். அந்த அரக்கர்களைப் பார்த்துப் பேசுகிறான் அங்கதன்.

"அட பயித்தியக்கார ஜனங்களே! நீங்கள் உயிர் பிழைக்க வேண்டுமா? கேளுங்கள், சொல்லுகிறேன் வழியை."

'ஏமம் சார,
    எளியவர் யாவிரும்!
தூமம் கால்வன
    வீரன் கடுசரம்,
வேம்மின் போல
    விழுவதன் முன்னமே,
போமின் போமின்
    புறத்(து)!' என்று போயினான்.

[ஏமம் சார: உயிர் பிழைத்துப் பந்தோபஸ்தாய் இருப்பதற்கு; எளியவர் யாவிரும்: பயித்தியக்காரர்களாகிய அரக்கர்களே நீங்கள் எல்லோரும்; தூமம் கால்வன வீரன் கடுசரம்: புகையைக் கக்குவதான அக்கினிமயமான ராம பாணங்கள்; வேம்மின்போல விழுவதன் முன்னமே: எதையும் தகிக்கக் கூடிய மின்னல்போல (ராம பாணங்கள்) இந்த இலங்கையில் வந்து விழுவதற்கு முன்னமேயே; போமின் போமின் புறத்து: ஒரே யடியாய் வேறு எங்காவது போய்த் தொலையுங்கள்; என்று போயினான்: என்று சொல்லிவிட்டு ஒரே பாய்ச்சலில் பாய்ந்து போய் விட்டான் அங்கதன்.]

இப்போது ராமன் இருந்த இடத்தில் இருந்து அங்கதனை எதிர்பார்த்த வண்ணமாய் இருக்கிறோம் நாமும்.

ஏதோ ஆகாயத்தில் தானே தாவித் தாவி வருகிறதாய் இருக்கிறது அங்கதன் வருகை. அவனும் அவனுடைய வெண்மையான மேனியும் மார்பில் குங்குமம் சேர்ந்த சந்தனம் பூசியது போன்ற இரத்தக் கறையும் நம் கண்ணுக்குப் புலப்படுகின்றன.

அந்த ரத்திடை
    ஆர்த்தெழுந் தான்அவன்,
சிந்து ரத்தம்
    துதைந்தெழும் செச்சையான்,
இந்து விண்நின்(று)
    இழிந்துள தாம்என
வந்து, வீரன்
    அடியின்வ ணங்கினான்.

[அந்தரத்திடை ஆர்த்தெழுந்தான் அவன்: மேலே சொன்ன அங்கதன் ஆகாயத்திடை ஒரு பேராரவாரம் செய்து கொண்டு ஒரே தாவாய்த் தாவினான்; சிந்து இரத்தம் துதைந்து எழும்: அரக்கர்கள் உடலில் இருந்து சிந்திய இரத்தம் பூசிப் பெருகியதான; செச்சையான்: சந்தனம் பூசிய மார்பினனான

கொண்டே கம்மலைக் கழற்றிக் கொடுத்தாள் முத்தம்மாள்.

"உம்...மூக்குத்தி?" என்றான் திருடன்.

"கொடுத்திடு, முத்தம்மா!"

"உம்...இன்னும் ஏதாச்சும் இருக்குதா? இருந்தா கொடு!"

"இந்தாப்பா, என்கிட்டே இருக்கிற ரூபாய்!" என்று பையிலிருந்த நாலு ரூபாயையும் எடுத்துக் கொடுத்தான் சோணாசலம்.

நான்கு திருடர்களும் காட்டுப்பாதையில் எங்கோ சென்று இருளில் மறைந்து போனார்கள்.

"ஐயோ! எல்லாம் போச்சே!" என்று முத்தம்மாள் ஓலமிட்டாள்.

"என்னமோ எழவு உழுந்துட்டாப் போலே அழுவுறியே! ... உம் ... ஏறு வண்டியிலே! ராமரு பட்டாபிசேகத் துக்காச்சும் போவலாம்!" என்றான் சோணாசலம்.

"என்ன, இனிமே புதூருக்கா? நல்லாயிருக்கு. வண்டியைத் திருப்பு; நம்ம ஊருக்கே போவலாம். அப்பாருகிட்டே சொன்னா திருடனுங்களையாவது கண்டு பிடிப்பாரு!"

"ஆமா, ஒங்கப்பாரு பெரிய புலி, திருடனுங்களைக் கண்டு புடிச்சிடுவாரு! போயேன்!"

"ஐயே, உன் பவிசுக்குப் பேசமாட்டியா? 'ஆம்புளைச் சிங்கம் இவரு தெரியுமா?'ன்னு ஜம்பம் பேசினியே! அப்புறம் திருடனுங்க வந்ததும் இருந்ததையும் கழட்டிக் கொடுக்கச் சொல்லி உங்கிட்ட இருந்த பணத்தையும் வேறே தூக்கிக் கொடுத்துட்டியே! இதனாலேதான் உன்னை எல்லாரும் சோணாசலம்னு சொல்றாங்க!"

"ஏய் முத்தம்மா, இனிமே நீ என்னைச் சோணாசலம்னு சொன்னே, ஒரே அடிதான் அப்புறம்......"

"தெரியுமே உன் பவிசு! கையாலே ஆகாட்டாலும் கோவம் வேறே......"

"கையாலே ஆகாதவனா! இதோ போறேன். இப்பவே போயி அந்தத் தடியனுங்களைப் பாத்துப் புடிச்சி நகைகளை யெல்லாம் கொண்டாராட்டா என் பேரு அருணாசலம் இல்லே. ஆமா, இதோ போறேன்!"

அவன் இருட்டில் வேகமாக நடந்தான்.

நகை போன துக்கத்தையும் மறந்து முத்தம்மாள் கலுக்கென்று சிரித்துச் சொன்னாள்:

"இந்தா பாரு, ஏ அண்ணே! என்னை ஒண்டியா உட்டுட்டுப் போறியே! சமத்துன்னா என்னை ஊட்டுலே கொண்டு போய் உட்டுப்பிட்டு, அப்புறமா போயி உன் கைவரிசையைக் காட்டு!"

"சரி, வா போவலாம். ஆனா ஒண்ணு. நான் நகையெல்லாம் கொண்டாந்ததும் நீ இனிமே என்னைச் சோணாசலம்னு கூப்பிடறது இல்லேன்னு சத்தியம் செஞ்சு கொடுக்கணும். என்னா தெரியுமா?"

"ஓ. நீ மாத்திரம் என் வளையல் களையும் சங்கிலியையும் கொண்டாந்து கொடுத்துடு. அப்புறம் சோணாசலம்னு கூப்பிடவே மாட்டேன்!"

"சரி, வண்டியிலே ஏறு! ஊட்டுக்குப் போவலாம்."

முத்தம்மாள் வண்டியிலே ஏறி உட்கார்ந்தாள். அருணாசலம் மாடுகளைத் தட்டிவிட்டான். வீட்டிற்குப் போகிற ஜோரில் மாடுகள் வேகமாக ஓடின. வீட்டு வாசலை அடைந்ததும் முத்தம்மாளைக் கீழே இறக்கிவிட்டு மாடுகளை அவிழ்த்துக் கொட்டகையில் கட்டினான். முத்தம்மாள் அப்பாவிடம் என்ன சொல்கிறது என்ற யோசனையுடன் வாசலிலேயே நின்று கொண்டிருந்தாள்.

"சரி, முத்தம்மா! நீ போயி ஊட்டுலே படுத்துக்க. நான் இப்பவே கால் நடையா நடந்து போயி திருடனுங்களைப் புடிச்சி



முதல்வர்:—என்ன ஸ்வாமி! நேற்று உங்கள் மனைவியையும் அழைத்துக்கொண்டு 'எக்ஸிபிஷனு'க்குப் போயிருந்தீர்களோ?

இரண்டாமவர்:—எப்படித் தெரிந்தது? போகும் பொழுது எங்களை நீங்கள் பார்த்தீர்களா?

முதல்வர்:—நேற்று உங்களைப் பார்க்கவில்லை; இன்றைக்கு இந்த அலமாரியிலே 'எவர்ஸில்வர்' பாத்திரங்களைப் பார்த்ததும் விஷயம் தெரிந்து விட்டது!

நகை எல்லாத்தையும் கொண்டாரேன். அப்பாருகிட்டே இருட்டுப் போனது பத்தி ஒண்ணும் சொல்லாதே! கேட்டா கழட்டி வச்சிருக்கேன்னு சொல்லு. நான் போயிட்டுச் சாயங்காலத்துக்குள்ளே வந்துடறேன்!"

அருணாசலம் இருட்டில் வேகமாக நடந்தான். மூத்தம்மாள் கண்ணீர் கலங்க வீட்டிற்குள் போய்ப்படுக்கையில் விழுந்தாள்.

3

மறுநாள் விடிவதற்குள் தன்னை ஒரு விதமாகச் சமாளித்துக் கொண்டாள் மூத்தம்மாள். பெட்டியில் வைத்திருந்த பழைய மூக்குத்தியையும் கம்மலையும் எடுத்துப் போட்டுக் கொண்டாள். ஆனால் அருணாசலத்தைப் பற்றி வையாபுரி பத்தர் கேட்ட கேள்விகளுக்குத்தான் அவளால் சரியான பதில் ஏதும் சொல்ல முடியவில்லை. என்னென்னவோ சால்ஜாப்புகள் சொல்லிக் கொண்டிருந்தாள்.

மாலைப்பொழுது ஆனதும் மூத்தம்மாள் அய்யனார்குளத்தில் நீராடிவிட்டுக் கையில் குடத்துடன் அரசமரத்தடி பிள்ளையாரிடம் வந்தாள். கல்லுப் பிள்ளையாருக்குப் பக்கத்தில் சோணாசலம் குறட்டை விட்டுத் தூங்குவதைக் கண்டதும் அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. பல தடவை சத்தம் போட்டு எழுப்பினாள். ஆனால் சோணாசலம் மாலை வெய்யில் மேலே சாய்வதையும் பொருட்படுத்தாமல் தூங்கிக் கொண்டிருந்தான். கையிலிருந்த ஒரு குடம் தண்ணீரையும் சோணாசலத்தின் மேல் சாய்த்தாள் மூத்தம்மாள். சோணாசலம் மெதுவாகக் கண்ணைத் திறந்து பார்த்தான். கோபத்தின் எல்லையை அடைந்திருந்த மூத்தம்மாள் ஆத்திரத்தோடு கேட்டாள்:

"இந்தா, ஏ சோணாசலம் அண்ணே! என்னமோ இருட்டுப்பயல்களைப் புடிச்சி நகையெல்லாம் வாங்கி வரேன்னு சொல்லிப்பிட்டு இங்கே வந்து மாடாட்டும் தூங்கறியே! இப்போ அப்பாருகிட்டே என்னு சொல்றது?"

"இந்தா, ஏ மூத்தம்மா! அருணாசல பத்தரைச் சும்மாவா நெனைச்சுகிட்டே? இதோ பாரு......!"

அவன் கையில் ஆறு பவுன் சங்கிலியையும் மூன்று ஜதை வளையல்களையும் கண்ட மூத்தம்மாளுக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. அத்தனை பற்களையும் காட்டிச் சொன்னாள்:

"அருணாசலம் அண்ணே! நீதான் புத்திசாலி! எப்படி அண்ணே கொண்டாந்தே அதுக்குள்ளே?"

"அதுவா, அதான் அருணாசல பத்தரின் சாமர்த்தியம்!"

"ஆமா, என் கம்மலும் மூக்குத்தியும் எங்கே?"

"இது கெடச்சது போதாதா?"

"போதாதுன்னு சொன்னேன்? எப்படிக் கெடச்சது?"

"அது பெரிய கதை...சரி, இனிமே என்னைச் சோணாசலம்னு சொல்ல மாட்டியே?"

"சேச்சே! இனிமே சொல்லுவேனா?"

"அப்ப சரி, நீ வீட்டுக்குப் போ! நான் கொளத்துலே குளிச்சிப்பிட்டு அப்புறமா வாரேன்."

"அண்ணே, அருணாசலம் அண்ணே! நகை எப்படி கெடச்சதுன்னு சொல்ல மாட்டியா?"

"உம்...சொல்றேன் கேளு: ராத்திரி நீயும் நானும் அந்தத் திருடனுங்ககிட்டே மாட்டிக்கிட்டமா? அப்ப ஒரே இருட்டா இருந்திச்சி இல்லே? அவனுங்க வந்ததுமே நான் உஜாராயிட்டேன். அவனுங்க என்னை வண்டியை விட்டுக் கீழே தள்ளினதும் உடனே ஓடிவந்து உன் கழுத்திலே கிடந்த சங்கிலியை அறுத்து விட்டேன்...!"

"நீயா சங்கிலியை அறுத்தே?"

"ஆமா, நான்தான்! அப்புறமா உன் கையிலே இருந்த வளையல்களை யெல்லாம் கூட நான்தான் கழட்டி ஒரு புதருக்குள்ளே போட்டுட்டேன்......"

"ஏ, அப்பா, நீ ரொம்பப் புத்திசாலியா ஆயிட்டியே!"

"உம்...அப்புறமா அந்தத் திடியனுங்க வண்டியில் ஏதாச்சும் இருக்குதான்னு பாத்துட்டு உங்கிட்டே வந்தானுங்க. அப்பதான் உன் மூக்குத்தியையும் கம்மலையும் கழட்டிக் கொடுத்திடச் சொன்னேன். அப்புறமா ராவோடே காட்டுக்குப் போயி பொழுது விடிஞ்சதும் புதரிலிருந்த நகையை எடுத்துக்கிட்டுப் புள்ளையாருகிட்டே வந்தேன்; நல்லா தூக்கம் வந்திடுச்சி."

"அடே அப்பா! எப்படி அண்ணே உனக்கு இந்தப் புத்தி எல்லாம் வந்திச்சி?"

"அதுவா, எல்லாம் இந்தக் கல்லுப் புள்ளையாராலேதான்! இவருதான் இந்தப் புத்தி யெல்லாம் எனக்குச் சொல்லிக் கொடுத்தாரு. சரி வா, புள்ளையாருக்குத் தேங்காய் உடச்சிக் கற்பூரம் கொளுத்திக் கும்பிடுவோம்."

கல்லுப் பிள்ளையாரைச் சுற்றி வந்த மூத்தம்மாள் தன் மனத்திற்குள் சங்கல்பம் செய்து கொண்டாள்—"இனிமேல் அருணாசலம் அண்ணனைச் சோணாசலம் என்று அழைப்பதில்லை" என்று!



ஒருவர் :— எத்தனை சிரமப்பட்டும் என்ன ராகம் பாடுகிறார் என்று கண்டு பிடிக்க முடியவில்லை, ஸார் !

மற்றவர் :—இது என்ன தொந்தரவு ! கண்டு பிடிக்க முடியவில்லையென்றால் போலீஸில் போய் எழுதிவையுங்கள். அவர்கள் கட்டாயம் கண்டுபிடித்துக் கொடுப்பார்கள்!

---

வாதத்தாலும் அருணாசலத்தின் திடமான நம்பிக்கையாலும் போவதென்று தீர்மானித்தான்.

இரவு பத்து மணிக்குப் புதூரில் நாடகம். மாலை ஆறு மணிக்குச் சலங்கை மணி கலகலக்க இரண்டு மாடுகள் பூட்டிய வண்டியில் கையில் சாட்டையுடன் ஏறி உட்கார்ந்தான் சோணாசலம். முத்தம்மாளும் வண்டியில் ஏற, புதூரை நோக்கி மாடுகள் பறந்தன.

மாலைப்பொழுது மறைந்துகொண்டே போக எங்கு பார்த்தாலும் இருள் சூழ்ந்து கொண்டே வந்தது. ஊரை விட்டுக் காட்டுப் பாதையைக் கடந்து செல்லும் போது நன்றாக இருட்டிவிட்டது. ஊரைக் கடந்ததும் சோணாசலத்திற்குப் பாட்டு வேறு குஷியாகக் கிளம்பியது.

"பழம் சொரியும் மரங்களையே
பார்க்க மனம் குளிருதடா!
காட்டு மலர் செடிகொடிகள்—தூரத்திலே
கலந்து மணம் வீசுதடா......!"

"இந்தா, சோணாசலம் அண்ணே ! என்ன இப்படி இருட்டிப் போச்சி ?"

அருணாசலத்தின் பாட்டுத் தடைப்பட்டது.

"ஆமா, இருட்டிப் போச்சி !"

"என்ன இப்படிச் சொல்றே? பயமா இல்லே ?"

"பயமா ! எனக்கா ? உம்...ஆம்பிளைச் சிங்கம் இவரு தெரியுமா ?"

முத்தம்மாள் சிரித்தாள். அருணாசலம் மீண்டும் தெம்மாங்கு பாட ஆரம்பித்து விட்டான். வண்டியும் புதூரைச் சமீபித்துக் கொண்டிருந்தது. பாட்டின் உச்சஸ்தாயியில் இருக்கும்போது முத்தம்மாள் சொன்னாள் :

"என்ன அண்ணே ! யாரோ நாலு பேரு ஓடிவர மாதிரி தெரியுதே !"

அருணாசலம் அவள் வார்த்தைகளைக் காதில் போட்டுக் கொண்டதாகவே தெரியவில்லை. "பயந்தாங் கொள்ளி" என்று மனதிற்குள் எண்ணிக் கொண்டே மீண்டும் பாட்டில் லயித்துவிட்டான்.

"ஏய், வண்டியை நிறுத்து !"

அப்போதுதான் அவன் பாட்டு நின்றது. தடியும் கையுமாக நின்ற நான்கு உருவங்கள் அவன் கண்ணெதிரில் நிற்பதைக் கண்டான். நல்ல இருட்டாக இருந்ததால் அவனுக்கு ஆட்களைக் கண்டு பிடிக்க முடியவில்லை. மனதிற்குள் எழுந்த பயத்தை வெளியே காட்டிக் கொள்ளாமல் அதிகார தோரணையில் சொன்னான் :

"யாருடா நீங்க, தடியனுங்களா ? வண்டி நிக்காது. நேரா புதூரு போவுது. வழியை உடுங்க......!"

முத்தம்மாள் நடுநடுங்கிப் போனாள். அருணாசலத்தை மெதுவாகக் கிள்ளி ரகசியமாகச் சொன்னாள் :

"என் அண்ணே, இவனுங்க திருடனுங்க போல இருக்கு ; அதிகமாப் பேசாதே......"

"ஓ, இவனுங்க திருடனுங்களா? இதோ பாரு! ஏய், வண்டியை உடறீங்களா, இல்லே ......" என்று கையை ஓங்கினான் அருணாசலம்.

எவனோ ஒரு தடியன் அருணாசலத்தின் கையைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளினான். முத்தம்மாள் "ஐயோ !" என்று கத்திக்கொண்டே வண்டியை விட்டுக் கீழே குதித்தாள். இருட்டிலே அவளுக்கு ஒன்றுமே தெரியவில்லை. எவனோ ஒருவன் அவள் கழுத்திலே இருந்த தங்கச் சங்கிலியை அறுத்துக் கொண்டான். கைகளில் இருந்த வளையல்களை இன்னொருவன் கழற்றிக் கொண்டான்.

"உம்...ஒரு எழுவையும் காணோமே ! காதுலே இருக்கிற கம்மலைக் கழட்டிக் கொடு !" என்று ஒரு தடியன் அதிகார தோரணையில் கேட்டான் முத்தம்மாளை.

"கொடுத்திடு, முத்தம்மா ! போனாப் போவுது !" என்றான் சோணாசலம்.

"ஐயோ சோணாசலம் ! உன்னோடு வந்தேனே ...... !" என்று முனகிக்

"சீ, நீ போ! நான் புள்ளையாருகிட்டே கேக்க வேண்டியதைக் கேட்டுகினு அப்புறமா வாரேன்!"

"ஐயோ, சோணாசலம் அண்ணே!"

முத்தம்மாள் நெற்றியிலே அடித்துக் கொண்டு குளத்தை நோக்கி நடந்தாள்.

ஊர் இருண்டுபோய் வெகு நேரமாகியும் அருணாசலம் பிள்ளையாரை விட்டு அசையாமல் உட்கார்ந்திருந்தான். அரச மரத்தடிப் பிள்ளையாரைப் போலவே அவனும் கல்லுமாதிரி உட்கார்ந்திருந்தான். அவனது சிந்தனை "மறுபடியும் அருணாசலமாவதெப்படி?" என்ற எண்ணத்திலேயே லயித்திருந்தது. ஆனாலும் அவனது சிந்தனை எவ்விதமான முடிவுக்கும் வரவில்லை. சோர்வுற்ற அவன் கடைசியாகப் பக்தி விநயத்துடன் பிள்ளையாரிடம் வேண்டிக் கொண்டான்.

"கல்லுப் புள்ளையாரே, நீதான் எனக்குத் துணை. நீதான் எனக்கு நல்ல வழியா காட்டி உடணும்."

* * *

**பி**ள்ளையார்ப்பட்டி நாட்டாண்மைக்காரர் வையாபுரி பத்தர். பணம் கொஞ்சம் உண்டு என்றாலும் அதற்காக மட்டும் அவருக்கு நாட்டாண்மைப் பதவி கிடைத்துவிடவில்லை. ஊர் ஜனங்களுக்கு அவர் மீதிருந்த நன்மதிப்பும் அவருடைய அளவுகடந்த தெய்வ பக்தியும்தான் அவருக்கு அந்தப் பதவியைத் தேடிக் கொடுத்தது. ஊரில் தேர், திருவிழா என்றால் அவர்தான் முன்னிருந்து நடத்திவைப்பார். இத்தகைய சிறப்பு வாய்ந்த வையாபுரி பத்தரின் ஏக புதல்வன்தான் அருணாசலம்; ஏக புதல்வி முத்தம்மாள்.



அருணாசலத்திற்குச் சுமார் இருபத்திரண்டு வயதிருக்கும். நல்ல கட்டுமஸ்தான உடல். எண்ணெய் தேய்த்து சீவப்படாத கிராப்புத் தலை. இந்த அம்சங்களெல்லாம் ஒருங்கே வாய்ந்த அருணாசலத்தை எவ்வளவோ முயன்று படிக்க வைத்தார் வையாபுரி பத்தர். ஆனால் அவனோ ஊர் சுற்றித் திரிவதிலேயே காலம் கழித்து வந்தான். படிப்புத்தான் வரவில்லையே என்று நிலபுலன்களைப் பார்த்து வரும்படி அனுப்பினால், அங்கு யாரையாவது அடித்து உதைத்துத் தன் அதிகாரத்தைக் காட்டிவிட்டு வருவான் சோணாசலம்!

அவன் இவ்விதம் தன் மதிப்பைக் கெடுத்துக் கொள்கிறானே என்று வையாபுரி பத்தர் அவனுக்கு எவ்விதமான வேலையும் கொடுப்பதில்லை. வேளா வேளைக்குச் சரியாகச் சாப்பிட்டுவிட்டு வீட்டிலிருந்தாலே போதுமென்று நினைத்திருந்தார். வேலை ஒன்றும் இல்லாததால் அருணாசலம் எப்போது பார்த்தாலும் அரசமரத்தடிப் பிள்ளையாரிடம் சென்று ஏதாகிலும் பேசிக் கொண்டிருப்பான்!

அருணாசலத்தின் சகோதரி முத்தம்மாளுக்குச் சுமார் பதினைந்து வயதிருக்கும். வயதிற்கேற்ற திட்டமான உயரம். நல்ல அழகியும்கூட. ஊருக்கு நல்லவளாக நடந்து கொள்வாள். வீட்டிற்கும் உகந்தவள். அவ்வளவுதான் சொல்லலாம் அவளைப் பற்றி!

## 2

**வ**ருஷா வருஷம் ஐப்பசி மாதம் பிள்ளையார்ப் பட்டிக்குப் பத்து மைல் தூரத்தில் உள்ள புதூரில் சம்பூர்ண ராமாயண நாடகம் நடப்பது வழக்கம். நாடகத்திற்கு எப்போதும் வையாபுரி பத்தர் குடும்பத்துடன் சென்று கலந்து கொண்டு நாடகத்தை வெற்றியுடன் முடித்துக் கொடுப்பார். ஆனால் இந்த வருஷம் புதூருக்குப் போக அவரால் முடியவில்லை. இரண்டு தினங்களுக்கு முன் அவருக்கு வந்த ஜல தோஷமும் காய்ச்சலும் இன்னும் விட்டபாடில்லை. ஆதலால் அருணாசலத்தையும் முத்தம்மாளையும் மட்டும் புதூருக்கு அனுப்பி வைக்க முடிவு செய்தார். முத்தம்மாளுக்கு இந்த யோசனை பிடிக்கவில்லை. சோணாசலத்தை நம்பி அவனுடன் தனியாகப் போக அவளுக்குப் பயமாக இருந்தது. இருந்தாலும் வையாபுரி பத்தரின் பிடி



# கல்லுப் பிள்ளையார்

சுவாமி

அய்யனூர் குளக்கரையில் ஓங்கி வளர்ந்து நிற்கும் அரசமரத்தடியில் கம்பீரமாக வீற்றிருந்தார் கல்லுப் பிள்ளையார். அவருக்குப் பக்கத்தில் ஏதோ பலத்த யோசனையுடன் உட்கார்ந்திருந்தான் அருணாசலம். சிறிது நேரத்திற்கு முன் அவன் தங்கை முத்தம்மாள் அவனை "சோணாசலம் அண்ணே!" என்று கூப்பிட்டது அவன் மனதை உறுத்தியது. ஊரில் அநேகமாய் சிறுவர் முதல் பெரியவர் வரை எல்லோரும் அவனை அப்படித்தான் கூப்பிடுகிறார்கள். இருந்தாலும் அவன் தங்கை முத்தம்மாளே அவனை இப்படிக் கூப்பிடுவது அவனுக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை. அவனை எப்படியாவது "அருணாசலம் அண்ணே!" என்று கூப்பிடும்படிச் செய்யவேண்டும் என்று எண்ணினான். எப்படிச் செய்வது என்றுதான் அவனுக்குப் புரியவில்லை!

கல்லுப் பிள்ளையாரை ஒருமுறை பார்த்தான். பிள்ளையார் ஏதாகிலும் ஒரு வழி காட்டுவார் என்ற நம்பிக்கை அவனது முகத்திலே பிரதிபலித்தது. ஆனால் பிள்ளையார் கல்லுமாதிரிதான் உட்கார்ந்திருந்தார். அவரது மௌனம் அவனது கோபத்தைக் கிளறிவிட்டது. எழுந்து நின்று கோபமாகவே பிள்ளையாரிடம் முறையிட்டான்:

"ஏ, கல்லுப் புள்ளையாரே! எனக்கு ஏதாச்சும் வழி சொல்லப் போறியா, இல்லையா?.........எங்கப்பா 'அருணாசலம்'னு அழகா, பச்சமா வச்ச பேரை ஏன் இப்படி எல்லாரும் 'சோணாசலம்'னு கூப்பிடுறாங்க? உன்னை யாராச்சும் குள்ளையாருன்னு கூப்பிட்டா நீ சும்மா இருப்பியா? கண்ணை அவிச்சிப்பிடுவியே! எதுக்குக் கல்லுமாதிரி உக்காந்திருக்கே, பேச மாட்டே?"

"இந்தா, சோணாசலம் அண்ணே......!"

கையிலே குடத்துடன் ஓடிவந்து நின்றாள் முத்தம்மாள்.

"ஏய் முத்தம்மா, இனிமே நீ என்னைச் சோணாசலம்னு கூப்பிட்டே—பாரு, அப்புறம் எனக்குக் கோவம் தலைக்கு மிஞ்சிடும்......"

"ஐய, சோணாசலம்னு கூப்பிட்டா கோவம் வருதே, இப்ப பேசிகிட்டு இருந்தியே அது யாருகிட்டே?"

"இதோ, இந்தப் புள்ளையாருகிட்டே!"

"இந்தா பாரு, கல்லுப் புள்ளையாரு எங்கனாச்சம் பேசுமா? அதுகிட்டே போயி பிரமாதமா சத்தம் போடுறியே! நீ இப்படி பயித்தியம் மாதிரிப் பேசறதினாலேதான் உன்னை எல்லாரும் 'சோணாசலம்'னு கூப்பிடுறாங்க. இப்ப தெரியுதா? சரி, பொழுது போயிடுச்சி—வா, வீட்டுக்குப் போவலாம்."

# காலக்ஷேபம்

### பேஷ் !

**மனைவி** (புதுக்குடித்தனம் செய்பவள்):— எந்தச் சாமான் வேண்டுமானாலும் 'எங்கே, எங்கே ?' என்று என்னைக் கேட்கிறீர்களே ! நான் வருவதற்கு முன் என்ன செய்தீர்கள்?

**கணவன்** :— நீ வருவதற்கு முன் சாமான்களெல்லாம் வைத்த இடத்திலிருக்கும் !

★

### அநுபவம் வேண்டாம் !

புதிதாகத் திறக்கப்பட்ட ஒரு பாங்கியில் இரவு வேளையில் காவல் காப்பதற்காக ஓர் ஆள் வேண்டுமென்று விளம்பரம் செய்திருந்தார்கள். அதற்கு ஓர் ஆள் வந்து விண்ணப்பம் செய்து கொண்டான்.

பாங்கிக் காரியதரிசி, "உனக்கு இந்த மாதிரி வேலையில் முன்னால் பழக்கம் உண்டா ?" என்று அவனைக் கேட்டார்.

"முன்னால் பழக்கம் எதுவும் இல்லை, ஆனால் ஒரு சின்ன ஓசை கேட்டாலும் நான் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டு விடுவேன்!" என்றான் அவன்.

★

### ஓகோ !

**கணவன்** :— நேற்று இராத்திரி உன் ஹார்மோனியப் பெட்டியைத் திருடன் வந்து தூக்கிக்கொண்டு ஓடுவதுபோல் சொப்பனம் கண்டேன் !

**மனைவி** :— நீங்கள் வாயை மூடிய வண்ணம் அதைப் பார்த்துக்கொண்டு இருந்தீர்களாக்கும் !

**கணவன்** :— இல்லையே! அவனைப் பார்த்து 'ஏன் அப்பா ஓடுகிறாய் ? மெதுவாய்த்தான் போயேன்' என்றேன்.

★

### அப்படியா ?

"பால் ரூபாய்க்கு எத்தனை படி, அப்பா?"

"ஒரு படிங்க !"

"நிஜப் பாலைக் கேட்கிறேன் !"

"நிஜப் பாலுங்களா ? அது ரூபாய்க்குக் கால் படிதானுங்க வரும் !"

### நல்ல காரணம் !

**பைத்தியக்காரர்களில் ஒருவன்** (புதிதாக வந்த சூப்பிரண்டெண்டிடம்):— ஐயா ! உங்களை ரொம்பவும் எங்களுக்குப் பிடித்திருக்கிறது !

**சூப்பிரண்டெண்ட்** (ஆச்சரியத்துடன்):— ஏன் ?

**பைத்தியக்காரன்** :— நீங்களும் எங்களில் ஒருவர் மாதிரியே இருக்கிறீர்கள் ; அதனால் தான் !

★

### பிரமாதமில்லை !

**சிறை விசிட்டர்** (ஒரு கைதியைப் பார்த்து):— ஏன் அப்பா, நீ சிறையில் இருக்கிறாய் ?

**கைதி** :— ஒன்றுமில்லைங்க, ஒரு கயிறு திருடினதற்காக !

**விசிட்டர்** :— என்ன, கயிறு திருடினதற்குச் சிறைத் தண்டனையா ?

**கைதி** :— ஆமாங்க ; அந்தக் கயிற்றின் நுனியிலே ஒரு மாடு கட்டி யிருந்ததுங்க !

★

### உண்மை !

**வாத்தியார்** (பையனின் தகப்பனாரிடம்):— உங்கள் பையன் பெரியவனானதும் பெரிய அரசியல் வாதியாக ஆகி விடுவான் போலிருக்கிறது !

**தகப்பனார்** (ஆச்சரியத்துடன்):— உங்களுக்கு எப்படித் தெரிந்தது ?

**வாத்தியார்** :— உங்கள் பையன் விஷயமில்லாமலே வளவள என்று ஒரு மணி நேரம் பேசுகிறான் !

---



"என்ன, கணக்குப் பிள்ளை! ஏகப்பட்ட கூட்டமாயிருக்கிறதே? என்ன விசேஷம் இன்றைக்கு ?"

"அதோ, உங்கள் பேர் போட்டிருக்கிற அந்தப் போர்டை இன்றைக்குப் புதிதாக மாட்டியிருக்கிறேன் !"

பதில் அளிக்கும்பொழுது சித்திரலேகா சொன்ன சொல் அதைக் காட்டிலும் பன்மடங்கு அதிகக் கசப்பாக இருந்தது. "எத்தனை மண்டைக் கர்வம் பிடித்த மங்கையானாலும், தனது அழகின் பலத்தைக் கொண்டு அவளைத் தானாகவே தன் காலடிகளில் வந்து விழுந்து வணங்கும்படிச் செய்யும் ஆற்றல் வாய்ந்த ஒரு பெண்ணுக்கு வாழ்த்துக்கள் கூறவேண்டியது அநாவசியம்!" என்று மண்டையில் அடித்தாற் போலப் பதில் சொன்னாள் சித்திரலேகா.

சித்திரலேகா சொன்னதைக் கேட்டதும் ஒருத்தி இன்னொருத்தியைப் பார்த்தாள். இன்னொருத்தி மற்றொருத்தியைப் பார்த்தாள். இவ்விதமாக ஒவ்வொரு பெண்ணும் ஒருவர் மற்றொருவரைப் பார்த்துக் கொண்டனர். அவள் சொன்ன சுடு சொல் ஆண்கள் கூடியிருந்த இடத்துக்கும் எட்டி அவர்களையும் அயரும்படி செய்து விட்டது. உடனே பீஜகுப்தன் பெண்கள் இருந்த பக்கம் திரும்பினான். 'சித்திரலேகாவை யாராவது அவமதித்து மட்டம் தட்டி விட்டால் என்ன செய்வது?' என்ற அச்சம் அவன் நெஞ்சத்திலே எழுந்தது. அதற்கேற்றாற் போலப் பெண்களிடையே நிகழ்ந்த அந்தக் காரசாரமான பேச்சு அவனுடைய அச்சத்தை இன்னும் அதிகமாக்கி விட்டது. "என்ன விஷயம்?" என்று கேட்டுக் கொண்டே எழுந்து வந்தான் அவன்.

அவன் அந்தக் கேள்வியைக் கேட்டதுதான் தாமதம்; கோபத்தினால் ஒரேயடியாகச் சிவந்திருந்த சித்திரலேகாவின் முகம் சாந்தமே உருவாக மாறி விட்டது. "ஒன்றுமில்லை; எங்களுக்குள் நாங்கள் கேலியாகப் பேசிப் பரிகாசம் பண்ணிக் கொண்டிருந்தோம்" என்று சொன்னாள். அடுத்த கணம் அவள் பெண்கள் பக்கம் திரும்பிக் 'கலகல' வென்று சிரிக்கவும் செய்தாள்.

சித்திரலேகாவின் இத்தகைய உணர்ச்சி மாறுதலைக் கண்ணுற்ற யசோதரா அப்படியே சொக்கிப் போய் விட்டாள். கண் மூடிக் கண் திறக்கும் நேரத்தில் மனதில் எழும் உணர்ச்சிகளை மாற்றிக் கொள்ளும் சித்திரலேகாவின் அபார திறமையை நினைத்து நினைத்து அவள் அதிசயித்தாள். பீஜகுப்தன் அங்கிருந்து சென்றதும் அவள் சித்திரலேகாவைப் பார்த்து, "உலக விவகாரத்தில் உன்னைப் போன்ற கெட்டிக்காரியை நான் இதுவரை பார்த்ததேயில்லை, அம்மா!" என்று சொன்னாள்.

"இல்லாவிட்டால் எல்லோரையும் இப்படிக் கண்ணில் விரலை விட்டு ஆட்டி வைக்க முடியுமா?" என்று சொல்லிச் சித்திரலேகா மடைவாய் திறந்து விட்டது போல மீண்டும் 'கடகட' வென்று சிரித்தாள்.

சித்திரலேகா சிரித்த சிரிப்பு அந்த மண்டபம் முழுவதும் எதிரொலித்தது. அங்கு வந்திருந்த வாலிபர்கள் அனைவருடைய கண்களும் அவள் பக்கம் திரும்பின. அடுத்த கணம் அவர்கள் பீஜகுப்தனைப் பார்த்து, "பாட வேண்டும்" என்று வேண்டிக் கொண்டனர்.

வீணையை எடுத்து வைத்துக் கொண்ட பீஜகுப்தன் வாகீசுவரியை ஆலாபனம் செய்ய ஆரம்பித்தான். சபையில் நல்ல அமைதி நிலவியது. ஆண்—பெண் அனைவரும் மந்திர வசப்பட்டவர்கள் போலப் பீஜகுப்தனுடைய பாட்டைக் கேட்டு ரசித்துக் கொண்டிருந்தனர். பீஜகுப்தன் பாட்டை முடித்தான். பிறகு மிருத்யுஞ்ஜயர் கையில் வீணையை எடுத்துக் கொண்டு யசோதராவுக்குச் சமிக்ஞை செய்தார். யசோதராவும் வாகீசுவரி ராகத்தை ஆரம்பித்தாள். யசோதரா பாடி முடித்ததும் மக்களின் மனதில், 'பாட்டு என்றால் பீஜகுப்தனுடைய பாட்டுத்தான் பாட்டு! யசோதராவினுடைய பாட்டு என்ன பாட்டு? யசோதராவின் பாட்டு பீஜகுப்தனுடைய பாட்டின் கால்தூசுகூடப் பெறாது' என்ற மனோ பாவம் உதித்திருக்க வேண்டும் என்பதை அவர்களுடைய முகங்கள் எடுத்துக் காட்டின. சித்திரலேகா மக்களின் முகபாவத்தைக் கொண்டே மனோபாவத்தைப் புரிந்து கொண்டாள். "யசோதராவை நான் ஒன்று வேண்டிக் கொள்கிறேன். மனமிருந்தால் அவள் இப்பொழுது கல்யாணியில் ஒரு பாட்டுப் பாடட்டும்" என்று கேட்டுக் கொண்டாள் அவள்.

ஜனங்கள் சித்திரலேகாவின் பக்கம் திரும்பினர். மிருத்யுஞ்ஜயரும் ஒரு முறை சித்திரலேகாவைப் பார்த்தார். சித்திரலேகா சொல்வதன் கருத்து அவருக்குச் சரியாக விளங்கவில்லை. ஆயினும் அம்மாதிரி வேண்டிக் கொண்டது அழைப்பிற்கிணங்கி விஜயம் செய்திருந்த ஒரு விருந்தாளியல்லவா? அழைப்பை ஏற்காமல் மறுப்பது நன்றாயிருக்குமா? ஆகவே மிருத்யுஞ்ஜயர் வீணையில் கல்யாணி ராகத்தை மீட்டத் தொடங்கினார். யசோதரா பாட ஆரம்பித்தாள்.

(தொடரும்)

சொல்வதை நம்பு" என்று சொல்லிச் சுவேதாங்கனைக் கூப்பிட்டான்.

சுவேதாங்கனுடன் இருவரும் வெளியே வந்தனர். பீஜகுப்தனுடைய ரதம் வாசலில் பூட்டியபடி நின்றது. சித்திரலேகாவும் பீஜகுப்தனும் ஏறி ரதத்தினுள் அமர்ந்தனர். சுவேதாங்கன் குதிரைகளின் கடிவாளக் கயிற்றைப் பிடித்துக் கொண்டான்.

குறித்த நேரத்தில் அழைப்புக் கிணங்க விருந்தாளிகள் மிருத்யுஞ்ஜயரின் மாளிகை வாசலை அடைந்தனர். "மேன்மை தங்கிய மகாராஜா பீஜகுப்தரின் ரதம் வாசலில் வந்து நிற்கின்றது" என்று வாயிற் காப்போன் உள்ளிருப்போரின் காதில் விழும்படி உரக்கக் கூவினான். மிருத்யுஞ்ஜயர் உடனே யசோதராவுடன் வாசற் பக்கம் வந்தார். மிருத்யுஞ்ஜயர் பீஜகுப்தனை எதிர்கொண்டு அழைத்தார். யசோதரா சித்திரலேகாவை வரவேற்றாள். சுவேதாங்கன் அவர்களுக்குப் பின்னால் சென்றான்.

பல வாசல்களைத் தாண்டி எல்லோரும் நடனசாலையை அடைந்தனர். பாடலிபுத்திர நகரத்தின் பற்பல பிரமுகர்கள் அங்கே குழுமியிருந்தனர். பீஜகுப்தனும் சித்திரலேகாவும் வருவதைக் கண்ட சகலரும் கைதட்டிச் சந்தோஷ ஆரவாரம் செய்தனர். சித்திரலேகா யசோதராவுடன் கூடப்போய் பெண்களின் கும்பலில் கலந்து கொண்டாள். பீஜகுப்தன் மிருத்யுஞ்ஜயருடன் சென்றான்.

யசோதராவைக் கண்ட சித்திரலேகா திகைத்துத் திக்பிரமை பிடித்தவள் போலானாள். இன்று வரை அவள் தன் அழகிலே அசாத்தியக் கர்வம் கொண்டிருந்தாள். தன்னைவிட அழகிற் சிறந்தவர்கள் வேறு யாருமே இருக்க முடியாது என்ற திட்டமான தன்னம்பிக்கையும் அவள் உள்ளத்திலே வேரூன்றியிருந்தது. ஆனால் யசோதராவைப் பார்த்த மாத்திரத்திலேயே அவளுடைய தன்னம்பிக்கை வேரற்று விழுந்தது; மண்டைக் கர்வம் மடிந்து அழிந்தது. யசோதரா மிகவும் மரியாதையுடன் சித்திரலேகாவுக்கு உட்கார ஆசனம் அளித்து உபசரித்தாள்; தானும் அவள் அருகிலேயே உட்கார்ந்து கொண்டாள். சித்திரலேகாவுக்கு யசோதரா ஆசார உபசாரங்கள் செய்வதையும் அவள் அருகில் போய் உட்காருவதையும் கண்ணுற்று, மற்ற பெண்கள் மிகவும் மனம் வெதும்பினர்.

யசோதரா சிறு பிராயத்திலேயே சித்திரலேகாவின் நடனத்தைப் பார்த்திருக்கிறாள்.



மனைவி :—என்ன இது! காலையில் ஆறு மணிக்கு உட்கார்ந்தவர் மத்தியானம் மணி பன்னிரண்டாகப் போகிறது. இன்னும் க்ஷவரம் செய்து கொள்ளுகிறீர்களே?

கணவன் :—நான் என்ன பண்ணட்டும்? ஒரு பக்கத்துக் கன்னத்தைப் பண்ணிக்கொண்டு வருவதற்குள்ளே மற்றொரு கன்னத்திலே மயிர் வளர்ந்து விடுகிறது!

---

அன்றைக்கே சித்திரலேகாவின் நடனம் அவளுடைய மனதை மிகவும் கவர்ந்து விட்டது. இன்று அவளுடைய தந்தை சித்திரலேகாவுடன் கூடவே அவள் இருக்க வேண்டும் என்று சொல்லியிருந்தார். யசோதராவுக்கு அந்தக் காரியம் மிகவும் பிடித்திருந்தது.

யுவதிகளில் பலர் சித்திரலேகாவைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டனர். சிலர் சிரித்துச் சிரித்துச் சித்திரலேகாவுடன் ஏதோ பேசினர். வேறு சிலர் கேலி செய்து குத்தலாகப் பேசிக் கும்மாளம் அடித்தனர். ஆனால் சித்திரலேகா அவற்றையெல்லாம் தவறுதலாக எடுத்துக் கொள்ளவேயில்லை. அவள் தன் நிலைமையை மிகவும் நன்றாக உணர்ந்திருந்தாள். அவளுக்குப் பக்கத்திலேயே நின்று கொண்டிருந்த மாபெரும் சிற்றரசர் ஒருவரின் மனைவி மிகவும் குறும்பாக, "இன்று நடனராணி சித்திரலேகா எங்களுக்குச் சமதையாக எங்கள் சமூகத்திலேயே ஒன்றறக் கலந்து கொள்ள முன் வந்ததை முன்னிட்டு நான் என் மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்!" என்றாள்.

அவள் சொன்ன சொல் எவ்வளவோ கசப்பாகத்தானிருந்தது. ஆனால் அதற்குப்

அன்று பீஜகுப்தனுக்கு மிருத்யுஞ்ஜயரிடமிருந்து விருந்துக்கு வரவேண்டுமென்று அழைப்பு வந்திருந்தது. யசோதராவின் பிறந்த நாளை முன்னிட்டு மிருத்யுஞ்ஜயர் மாபெரும் கொண்டாட்டம் ஒன்றுக்கு ஏற்பாடு செய்திருந்தார். யசோதரா சின்னஞ்சிறு குழந்தையாக இருந்த காலத்தில் பீஜகுப்தன் அவளை இரண்டொரு முறை பார்த்திருந்தான். மிருத்யுஞ்ஜயரை அவனுக்கு அவ்வளவாகத் தெரியாது. ஆயினும் அவரிடமிருந்து அவனுக்கு அழைப்பு வந்திருந்தது. அதைக் காண அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அடுத்த வரியில் சித்திரலேகாவும் அவனுடன் வரவேண்டும் என்று எழுதியிருந்ததைப் படித்தபொழுது அவனுடைய ஆச்சரியம் இன்னும் பன்மடங்கு அதிகரித்தது.

பீஜகுப்தன் சித்திரலேகாவைப் பார்த்து, "சித்திரலேகா! ஒரு வேடிக்கை நடந்திருக்கிறது. கேட்கிறாயா? ...... ஆமாம், உனக்கு வயது முதிர்ந்த கிழவர் மிருத்யுஞ்ஜயரைத் தெரியும் அல்லவா?" என்று கேட்டான்.

"ஆமாம், தெரியும்?"



தகப்பனார்:—இதோ பார்! நீ ரொம்ப விஷமம் செய்கிறாயாம். சொன்னபடி கேட்கிறதில்லையாம். உன்னை நன்றாக அடிக்க வேண்டுமென்று அம்மா சொல்கிறாள். நான் உனக்கு எத்தனை தடவை சொல்லி யிருக்கிறேன்—என் மாதிரி சமர்த்தாயிரு என்று!

"அவருடைய பெண் யசோதராவையும் உனக்கு ஒரு வேளை தெரியுமோ?" என்று கேட்டான் பீஜகுப்தன்.

சித்திரலேகா சிறிது நேரம் யோசித்து விட்டு, "ஆமாம், அவளையும் இரண்டொரு தடவை பார்த்திருப்பதாக ஞாபகம். ஏன்?" என்று கேட்டாள்.

"இன்று யசோதராவுக்குப் பிறந்த நாள் கொண்டாட்டமாம். அதற்கு நான் வரவேண்டும் என்று மிருத்யுஞ்ஜயர் அழைப்பு அனுப்பியிருக்கிறார். எனக்கு மிருத்யுஞ்ஜயரை அவ்வளவாகத் தெரியாது. ஆயினும் அவரிடமிருந்து அழைப்பு வந்திருப்பதைக் காண எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. ஆனால் அதைவிட இன்னும் அதிக ஆச்சரியம் தரும் விஷயம் என்னவென்றால், 'என்னுடன் நீயும் வரவேண்டும்' என்று அந்த அழைப்பிலே எழுதியிருக்கிறது. அதையும் விட ஆச்சரியம் தரும் விஷயம் என்னவென்றால், அந்த அழைப்பு என்மூலம் உனக்கு வந்திருக்கிறது" என்று பீஜகுப்தன் ஆச்சரியத்துக்கு மேல் ஆச்சரியமாக அடுக்கிக் கொண்டே போனான்.

"அப்படியா? அப்படியானால் நான் வருவது அநுசிதம் என்றுதான் அதற்கு அர்த்தம் கொள்ள வேண்டும்!"

"அப்படி குதர்க்கம் செய்து கொள்ளுவானேன்? என் மூலமாக என்னுடன் கூடவே நீ வரவேண்டும் என்று அழைப்பு வந்திருப்பது ஒரு விதத்தில் உசிதம்தானே? சமூகம் உனக்கும் எனக்கும் ஏற்பட்டிருக்கும் தொடர்பைப் பரிசுத்தமானது என்று எண்ணுகிறது. ஆகவேதான், இம்மாதிரி எனக்கு மட்டும் அழைப்பு வந்திருக்கிறது என்று தெரியவில்லையா?" என்றான் பீஜகுப்தன்.

சித்திரலேகா சிறிது நேரம் பேசாமல் இருந்தாள். பிறகு, "ஸ்வாமி! உயர் குடும்பங்களில் நடக்கும் விசேஷங்களுக்கோ, கொண்டாட்டங்களுக்கோ நாட்டியக்காரி என்ற முறையில் போய்த்தான் எனக்கு வழக்கம். உயர் குலத்துப் பெண்கள் என்னைத் தூற்றி இழிவாகப் பேசுவார்களோ என்னவோ? அப்படி ஏதாவது இக்கட்டான நிலைமை ஏற்பட்டு விட்டால் நான் என்ன செய்வது? சரியாக விளங்கவில்லையே!" என்றாள்.

பீஜகுப்தன் ஏகத்தாளமாக நகைத்தான். "என்னுடன் இருக்கும்பொழுது உன்னைத் தூற்றி இழிவாகப் பேச யாரும் துணியமாட்டார்கள். நான் இருக்கும்பொழுது உனக்கு என்ன கவலை? நான்

யசோதரா தன்னை மணந்து கொள்ளச் சம்மதிக்க மாட்டாளா?' என்று ஒவ்வொரு வாலிபனும் ஏங்கித் தவம் கிடந்தான் என்றால் அது சகஜம்தானே? யசோதரா வெறும் பணக்காரி மட்டும் அல்ல; நல்ல அழகியும் கூட. அழகு என்றால் சாதாரண அழகல்ல. ரதியும் ரம்பையும்கூட அவளுக்கு நிகராக மாட்டார்கள். அவளுடைய அழகுக்கு அவளுடைய அழகைத்தான் உவமையாகக் கூறமுடியும். கள்ளங் கபடமற்ற அவளுடைய முகத்தில் சாந்தம் குடிகொண்டிருந்தது. அறியாப் பருவத்தில் கள்ளங் கபடமின்றி 'கலீர்' என்ற வெண்கல நாதத்துடன் எழும் சிரிப்பு மறைந்து மனமோகனப் புன்னகையாக மாறி மாந்தர் மனதை மயக்கும் சக்தி பெற்றிருந்தது. அதிலிருந்தே குழவிப் பருவம் யௌவனத்தினிடம் தோல்வியுற்று அதைச் சரண் அடைந்து விட்டது என்பது தெற்றென விளங்கியது. மான்போன்ற அகன்ற நீண்ட அவளுடைய அழகிய விழிகளில் சங்கோசம் தோய்ந்திருந்தது. அமிழ்தினும் இனிய அவளுடைய சிவந்த குழியும் கன்னங்களில் நாணம் புதைந்திருந்தது. யௌவனத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்த யசோதராவின் சரீரத்துக்கு அமிர்தமும் உல்லாசமும் சேர்ந்து மெருகு கொடுத்திருந்தது. அவளுடைய சரீரம் தளதளவென்று தழைத்துக் காண்போர் கண்களுக்குக் கவர்ச்சியையும் குளிர்ச்சியையும் உண்டு பண்ணிக் கொண்டிருந்தது. தான் என்னும் அகந்தையோ, கர்வமோ, தான்தோன்றித்தனமோ அவளிடத்தில் சிறிதும் தலைகாட்டவில்லை. அவளிடத்தில் நாணமும் சாந்தமும் ஒருங்கே குடிகொண்டிருந்தன.

வயது முதிர்ந்தவரான மிருத்யுஞ்ஜயர் யசோதராவுக்காகத் தகுந்த வரன் தேடுவதில் முனைந்திருந்தார். தற்செயலாக அவருடைய கவனம் பீஜகுப்தன்மீது விழுந்தது. பீஜகுப்தனுக்கு அதுகாறும் கல்யாணம் ஆகவில்லை. அவன் உயர் குலத்தில் உதித்த வாலிபனாகவும் இருந்தான். மிருத்யுஞ்ஜயருக்கு வேண்டியவர்கள் எத்தனையோ பேர் இருந்தனர். அவர்களில் பலருக்கு யசோதராவைத் தன் பிள்ளைக்குக் கல்யாணம் செய்து மருமகளாக்கிக்கொள்ள வேண்டும் என்ற அவா உள்ளூற இருந்தது. அவர்கள் ஒருதடவை அல்ல; பல தடவைகள் பீஜகுப்தனுக்கும் சித்திரலேகாவுக்கும் உள்ள தொடர்பை எடுத்துச் சொல்லி அவருடைய மனதை மாற்ற முயன்றனர். ஆனால் வயதிலும் அநுபவத்திலும் முதிர்ந்தவரான மிருத்யுஞ்ஜயர் அவர்களுடைய பேச்சையெல்லாம் காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

“பீஜகுப்தனுக்கு இது வயது காலம் அல்லவா? வயது காலத்தில் வெறி முற்றுவது இயல்புதானே? வருங்காலம் எவ்வளவோ விசாலமானது; அகன்றது; நீண்டது. அது மட்டும் அல்ல; பீஜகுப்தன் நல்ல கல்விமானுங்கூட. அவன் இப்பொழுது தான் அநுபவசாகரத்தில் மிதந்து கொண்டிருக்கிறான். போகப்போக எல்லாம் தானாகச் சரியாகி விடும்” என்று ஒரே பதிலை அவர் சொல்லி வந்தார்.



# சித்ரலேகா

ஸ்ரீ பகவதிசரண் வர்மா — மொழிபெயர்ப்பு: ரா.வீ.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

## பிறந்த நாள் கொண்டாட்டம்

மதிப்பிற்குரிய மிருத்யுஞ்ஜயர் பிறவியில் க்ஷத்திரியராக இருந்தபொழுதிலும் கர்மத்தில் பிராமணராக இருந்தார். பாடலிபுத்திர நகரத்தில் வாழ்ந்த சிற்றரசர்களுக்குள் அவர்தான் மிகவும் வயது முதிர்ந்தவர். உல்லாசமும் உவகையும் சுகபோகங்களும் தாண்டவமாட வேண்டிய அவருடைய மாளிகையில் தியாகமும் வைராக்யமும் ஆட்சி செலுத்தி வந்தன. மக்கள் விதேக மன்னரை அவருக்கு உவமையாகக் கூறி வந்தனர். அவர் அந்த உவமைக்கு மிகவும் அருகதை வாய்ந்தவராகவுங்கூட இருந்தார். அந்த நகரத்திலே மிருத்யுஞ்ஜயரின் பெயரைக் கேள்விப்படாதவர்களே கிடையாது. அவரைப் போன்ற குணநிசயங்களும் கம்பீரத் தோற்றமும் வாய்ந்தோர்களை விரல் விட்டு எண்ணி விடலாம். மிருத்யுஞ்ஜயரின் மனம் கோலாகலமும் இன்பக் கேளிக்கைகளும் நிறைந்த ஜனக் கும்பலோடு கூடிய இந்த உலகத்திலே அதிகமாக நாட்டம் கொள்ளவில்லை. பூஜை புனஸ்காரங்களிலும், தியானத்திலும் ஆராதனையிலும் உபாசனையிலும் அவருக்கு ஈடுபாடு அதிகமாக இருந்தது. எப்பொழுது பார்த்தாலும் ஏகாந்தத்தை நாடிப் பேரின்ப விசாரத்தில் இணைந்திருப்பதில் அவருக்கு அலாதி ஆனந்தம்!

ஏகாந்தத்தில் ஈடுபாடு கொண்ட அவரிடத்தில் ஏராளமான பொருள் இருந்தது; சுகபோக வைபவங்களுக்கான சாமக்கிரியைகள் இருந்தன. அவர் நகரத்தில் உள்ள முக்கியமான சிற்றரசர்களுக்குள் முதன்மை ஸ்தானம் பெற்றிருந்தார். அரச அவையிலே கூட அவருக்குப் பிரத்தியேகமான அந்தஸ்தும் ஆஸனமும் உண்டு. அவருடைய பெயரைக் கேட்ட மாத்திரத்தில் மக்கள் மிக மரியாதையுடன் தலை வணங்குவர். எதிரே நேரில் கண்டுவிட்டால் மிகுந்த பக்தி சிரத்தையுடன் அவருக்கு அடி பணிவர். மதிப்பிற்குரிய மிருத்யுஞ்ஜயரின் சாதனை மகத்தானது; மாபெரும் சக்தி வாய்ந்தது. அறிவுத் துறையிலே அவருக்கு இணை அவர்தான் என்று சொல்ல வேண்டும். அவர் மிகுந்த ஆத்மீக பலமும் பொருந்தியவர். சிறிதும் தளராத மன உறுதியும் திடசித்தமும் கொண்டவர். அவரிடம் ஞானச் சுடர் ஒளிவீசிக் கொண்டிருந்தது. 'ஞானக் களஞ்சியம்' என்று அவரைச் சொன்னால் அது சிறிதும் மிகையாகாது.

மிருத்யுஞ்ஜயருக்குப் பிள்ளையில்லை. அவருக்கு ஒரே ஒரு பெண் மட்டும்தானிருந்தாள். அந்தப் பெண்ணின் பெயர் யசோதரா. ஒரே குழந்தையாதலால் மிருத்யுஞ்ஜயர் அவள்மீது அளவற்ற பற்று வைத்திருந்தார். அவளைத் தன் உயிருக்கு உயிராக நினைத்துப் பாதுகாத்து வந்தார். யசோதராவின் யௌவனம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து மிளிர்ந்து வந்த காலம் அது. அப்பொழுது மிருத்யுஞ்ஜயரின் வாழ்க்கைச் சூரியன் வர வர மங்கி மலைவாயில் விழுந்து கொண்டிருந்தான். 'அளவற்ற ஐசுவரியத்துக்கு எஜமானியான

வண்டியிலிருந்து இறங்கிய ஜனகத்தையும் அவள் கணவனையும் ஊரே கூடிக் கொண்டு அதிசயமாகப் பார்த்தது.

பெண்ணைப் பார்த்ததும் வாத்ஸல்யத்துடன் தழுவிக்கொண்டாள் செல்லம்மாள். "வாருங்கள்" என்று மாப்பிள்ளையைச் சம்பிரதாயப்படி அழைத்துவிட்டு, மகளை அழைத்துக் கொண்டு உள்ளே போனாள். ஊர் சமாசாரத்தை யெல்லாம் விசாரித்துவிட்டு "விமலா சௌக்கியமாக இருக்கிறாளா, அம்மா?" என்றாள் ஜனகம்.

"உம்......விமலாவா...வந்து......அவள் இங்கேதான் இருக்கா!" என்றாள் செல்லம்மாள்.

தாயாரின் தயக்கத்தைக் கவனித்த ஜனகம் "அப்படியானால் நான் போய் அவளைப் பார்த்துட்டு வரேன்!" என்று கிளம்பினாள்.

"வந்து...நீ போய் அவளைப் பார்க்கக் கூடாது......!"

"பார்க்கக் கூடாதா! ஏன்?"

"இன்னும் ஒரு வருஷம் ஆகவில்லை."

"என்னம்மா, நீ என்ன சொல்றே? எனக் கொண்ணும் புரியல்லையே?"

"வந்து...இரண்டு மாசத்துக்கு முன்னாலே ஒருநாள் சுந்தரேசன்...மூணு நாள் ஜுரத்திலே...போய்விட்டான்...!"

"என்ன!"

அகில உலகமும் சுழல்வது போலிருந்தது ஜனகத்திற்கு. தடுமாறி விழாமல் பக்கத்திலிருந்த தூணைப் பிடித்துக் கொண்டாள்.

"விமலா—சுந்தரேசன்!"

"கிழவராச்சேன்னு சொன்னேன்..."

"கிழவர்...பெண்...விதவை!"

"மாங்கல்ய பலத்துடன் நீ தீர்க்காயுசா இருக்கணும்!"

அவ்வளவுதான்; அடுத்த நிமிஷம் "ஐயோ!" என்று அலறியவாறே வாசல் புறம் ஓடினாள் ஜனகம்.

வண்டிக்காரனுக்குச் சில்லறை கொடுத்து அனுப்பிவிட்டு ரேழியில் வந்து கொண்டிருந்த ஆத்மநாதய்யரின் முன் தடாலென்று விழுந்து அழுதாள்.

"ஜனகம், ஜனகம்! என்ன, என்ன?" என்று பதறினார் அவர்.

ஜனகம் தலை நிமிர்ந்தாள். கண்களில் வழிந்த நீரைத் துடைத்துக் கொண்டு, "நானும் உங்களோடேயே வந்துடறேன், கல்கத்தாவுக்கு!" என்றாள்.

நீர் மல்கும் கண்களுடன் சட்டென்று முகத்தை மறுபக்கம் திருப்பிக் கொண்டாள் ஜனகம்.

கிழவர்—பெண்—விதவை!

இந்த வார்த்தைகள் அவள் கண்முன் நர்த்தனம் ஆடின.

"ஜனகம், கோவிச்சுக்காதே! நான் சொன்னது தப்பு. என்னை மன்னிச்சுடு!" என்று சொல்லிவிட்டுச் சென்றாள் விமலா.

அடுத்த மாதமே விமலாவிற்கும் சந்திரசேகரனுக்கும் விமரிசையாகக் கல்யாணம் நடந்தேறியது. மணப் பந்தலில் மாப்பிள்ளை தன்னை அடிக்கடி பார்த்து உள்ளுக்குள் வேதனைப் படுவதை ஜனகம் அறியாமல் போகவில்லை. பாம்பின் கால் பாம்பல்லவா அறியும்?

ஒன்றிரண்டு வாரங்களில் ஒரு கிராமத்துக் கோயிலில் ஈஸ்வர சந்நிதானத்தில் ஆத்மநாதய்யருக்கும் ஜனகத்திற்கும் திருமணம் நடந்தது.

கணவனுடன் தன் மகள் ஊருக்குக் கிளம்பும்போது தாயார் கண்கலங்கினாள். ஜனகம் விமலாவின் தாயாரையும் தகப்பனாரையும் நமஸ்கரித்தாள். "நல்ல மாங்கல்ய பலத்தோடு தீர்க்காயுசா இரு, அம்மா!" என்று விமலாவின் தாயார் ஆசீர்வதித்த போது அவள் வாயே குழறியது. ஜனகம் சட்டென்று விமலாவைப் பார்த்தாள். அடுத்த கணம் குனிந்து தன் மார்பில் தவழ்ந்த மாங்கல்யத்தைக் கவனித்தாள். கண்களில் நீர் சுரக்க வெளியே சென்று விட்டாள்.

## 5

கிட்டத்தட்ட ஒரு வருஷம் ஆகிறது ஜனகம் தன் தாயாரைப் பார்த்து. கடித மூலம் க்ஷேம சமாசாரம் மட்டும் தெரிந்து வந்தது.

இந்த ஒரு வருஷ காலத்திற்குள்!—அம்மம்மா!—ஒருநாள் வெளியிலிருந்து வந்த ஆத்மநாதய்யர் தலைவலி என்று படுத்துக் கொண்டார். அவ்வளவுதான்; மறுநாள் படுத்த படுக்கையாகிவிட்டார். விடாமல் இரண்டு வாரம் சாவித்திரி யமனுடன் போராடியதுபோல் போராடினாள் ஜனகம். அவர் வியாதியுடன் படுத்திருந்தபோது எத்தனையோ இரவுகள் அவர்மீது சாய்ந்து தன் திருமாங்கல்யத்தைக் கைகளில் பிடித்துக் கொண்டு அவள் அழுதிருக்கிறாள்.

"கிழவராச்சேன்னு சொன்னேன்......"

"மாங்கல்ய பலத்தோடு தீர்க்காயுசா இரு, அம்மா!"

இந்த வார்த்தைகள் அவள் இதயத்தைக் குடைந்து ரணமாக்கின.

நல்லவேளை! ஈஸ்வரி அவள் பிரார்த்தனைக்குச் செவி சாய்த்து மாங்கல்யப் பிச்சை தந்தாள்.

ஆனால் அடிக்கடி சந்திரசேகரனின் நினைவு வேறு வந்து அவள் மனதை வாட்டியது.

ஒருநாள் காலை, "ஒன்று சொல்றேன் கேட்பேளா? ஊருக்குப்போய் நான் இரண்டு மாசம் இருந்துட்டு வரேன்!" என்றாள் மெல்லிய குரலில் ஜனகம்.

ஆத்மநாதய்யர் இவ்வளவு நாட்களாக அவளைக் கவனித்திருக்கிறார்—அவளுக்குத் தன்னிடம் மன நிம்மதி யில்லை என்றுதான்!

எப்படியாவது அவள் கொஞ்சகாலம் சந்தோஷமாய் மன நிம்மதியுடன் இருக்கட்டும் என்று தீர்மானித்தவராய், "அதற்கென்ன, போவோம். எப்படியாவது உன் உடம்பும் மனசும் தேறினால் சரி!" என்று ஆதரவுடன் கூறினார்.

ரயில் பிரயாணத்தில் அவளுடைய மன நிம்மதியைக் குட்டிச்சுவராக்கும் சம்பவங்கள் இரண்டொன்று நிகழ்ந்தன.

வால்டேர் ஜங்ஷனில் யாரோ ஒருவரைப் பார்க்க நேர்ந்தது. ஜனகம் கண்ணைத் துடைத்துக் கொண்டு பார்த்தாள்.

"யாரது? சந்திரசேகரா?"

"இருக்காது; வெறும் பிரமைதான்!"

அசப்பில் சந்திரசேகரன் மாதிரியே இருந்த அந்த ஆசாமியைக் கண்டதும் பழைய எண்ணங்கள் குமுறி எழுந்தன.

இந்த மாதிரி இரண்டாம் வகுப்பு வண்டியில் தானும் சந்திரசேகரனும் ஜோடியாகப் போனால் எவ்வளவு அழகாக இருக்கும் என்றெல்லாம் விபரீதமாகக் கற்பனை செய்து பார்க்க ஆரம்பித்து விட்டது அவளது பேதை உள்ளம். அடுத்த நிமிஷம் அவள் தன் கணவர் இருந்த பக்கம் திரும்பினாள்; நரைத்த தலை, சுருங்கிய சதை, இடுங்கிய கண்கள்!

சந்திரசேகரனின் ஆஜானுபாகுவான சரீரம் எங்கே, இவை எங்கே?

## 6

"ஜனகம், ஊர் வந்துடுத்தே! எழுந்திரு, இறங்கலாம்" என்று ஆத்மநாதய்யர் சொன்ன பிறகுதான் ஜனகம் கனவு உலகிலிருந்து விழித்துக் கொண்டாள்.

டான் செல்லம்மாள். ஜனகம் பிரமித்துப் போய் நின்று விட்டாள். ஆனால் அவள் சில பெண்களைப் போல் 'கன்னா பின்னா' வென்று மனோராஜ்யம் செய்து மாய்ந்து போய் விடவில்லை. "ஜனகம், ஜனகம்" என்று இரண்டு தடவை செல்லம்மாள் கூப்பிட்ட பிறகு சுய உணர்வு வந்து விட்டது அவளுக்கு.



### 3

கொல்லைப்புறத்து வாசற்படியில் நின்றவாறே கனவு கண்டு கொண்டிருந்தாள் ஜனகம். சுந்தரேசன்—அவர் தான் நேற்று விமலாவைப் பார்க்க வந்தவர்—ஏன் தன்னை அப்படி விழுங்கி விடுவது போல் பார்க்கவேண்டும்? தனக்குக்கூட அவரை அடிக்கடி திருட்டுத்தனமாகப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் ஏன் உண்டாயிற்று? ஆள் அழகாகத்தான் இருக்கிறார். விமலாவுக்குத் தகுந்த ஜோடிதான்!

ஜனகத்தின் கனவு கலைந்தது. "ஜனகம்!" என்று கூப்பிட்டுக் கொண்டே பரபரப்புடன் உள்ளே நுழைந்தாள் செல்லம்மாள்.

"என்னம்மா......?"

"நான்தான் உன்னைக் காலம்பற அங்கே வரவேண்டாம்னு சொன்னேனே, ஏன் வந்தே நீ?"

செல்லம்மாளின் குரலில் வருத்தம் தோய்ந்திருந்தது.

"ஏன், என்ன சமாசாரம்?" என்று பதறினாள் ஜனகம்.

"ஒண்ணுமில்லே; வந்த பிள்ளையாண்டான் உன்னைப் பார்த்துட்டு உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளலாமா, யார் நீ—அப்படின்னு விசாரிச்சானாம் அவா கிட்டே!"

திடீரென்று ஒரு சந்தோஷ உணர்ச்சி, சுழல் காற்று ஒரு துரும்பை உயரே தூக்கி வான மண்டலத்திற்குக் கொண்டு போவது போல், அவள் மார்பிலிருந்து கிளம்பி வேகமாய் வந்து நெஞ்சை அடைத்துக் கொண்டது. அதன் வேகத்தில் திக்கு முக்காடிப் போனாள் ஜனகம்.

"நி...ஜ...ம்...மா...வா...!"

"நீ ஏன் அங்கே வந்தே? மாமி என்னைக் கோவிச்சண்டா. அதனாலே கூடிய சீக்கிரத்தில்...உனக்கு......முன்னே சொன்ன இடத்தை முடிச்சுடலாம்னு சொன்னாள்!"

எவ்வளவு வேகத்துடன் ஜனகத்தின் உணர்ச்சி எழும்பியதோ, அதே வேகத்தில் தலைகீழாகப் பாதாளத்தில் போய் விழுந்தது.

"ஜனகம், நான் என்னடியம்மா பண்ணுவேன்? உன்னை விட்டா எனக்கு கதி யாரு? வயசாச்சேன்னு பார்க்காதே; எப்படியாவது நீ சுகப்பட்டால் போதும்" என்று தேம்பினாள் செல்லம்மாள்.

ஜனகம் க்ஷணநேரம் மௌனமாக இருந்தாள். பிறகு அவளையுமறியாமல் அவள் உதட்டிலிருந்து, "ஆக......ட்டு......ம், அம்மா...!" என்ற வார்த்தை வெளி வந்தது.

### 4

"ஏன் ஜனகம், நிஜமாவா?" என்றாள் விமலா.

"ஆமாம்."

ஒரு அசாதாரணமான அமைதி அவள் முகத்தில் நிலவியது.

"நான் கேட்கிறேனேன்னு தப்பா நினைச்சுக்காதே; ஐம்பத்திரண்டு வயசான கிழவராச்சேன்னு சொன்னேன்!"




கல்கத்தா மெயில் பெஜவாடா ஸ்டேஷனில் வந்து நின்றது. பிளாட்பாரத்தில் ஒரே கலகலப்பும் பரபரப்புமாயிருந்தது. பீடி சிகரெட், பழங்கள் இவைகளை விற்பவர்கள் ஏக காலத்தில் பலஸ்வரத்தில் கத்திக் காதைச் செவிடுபடுத்திக் கொண்டிருந்தனர். ஜன்னலோரத்தில் உட்கார்ந்திருந்த ஜனகம் அந்த அபஸ்வரத்தைச் சகிக்கமாட்டாமல் தலையை உள்ளுக்கு இழுத்துக் கொண்டாள். அப்போது அதே பெட்டியில் ஒரு கனவான் ஏறினார். ஜனகத்தின் கணவருக்கு அவரைத் தெரியும் என்பதை அவர் புன்சிரிப்பே காட்டியது.

"நமஸ்காரம்; பெண்ணோடு ஊருக்குப் போறாப்போலே இருக்கு!" என்றார் புதிதாக வந்தவர்.

ஜனகம் திடுக்கிட்டு வெடுக்கெனத் தலையைத் திருப்பி ஜன்னல் வழியே வான வெளியை வெறித்துப் பார்த்தாள். அவள் விழிகளின் கோணத்தில் இரு சொட்டு நீர்த் திவலைகள் பனிச்சென்று அந்தக் காலை வெய்யிலில் மின்னின.

"இல்லை......வந்து......இது என்...... மனைவி......" என்று ஜனகத்தின் கணவர் ஆத்மநாதய்யர் திணறித் திணறிச் சொல்லும்போது அவர் முகத்தில் அசட்டுக்களை ததும்பியது.

"ஓ! ஐ ஆம் ஸாரி...!" என்று மழுப்பினார் புதியவர்.

பிறகு சிறிது நேரம் வரையில் அந்தப் பெட்டியில் கோரமான அமைதி நிலவியது. தவறானதொரு காரியத்தைச் செய்துவிட்டதற்காக மூன்று உள்ளங்கள் வருந்தின.

ஜன்னலருகில் இருந்த ஜனகம் நெட்டுயிர்த்தாள். மனதின் அடித்தளத்திலிருந்து துக்கம், ஏக்கம் எல்லாம் ஒன்றாகத் திரண்டு மார்பைப் பிளந்து கொண்டு வருவது போன்று ஒரு பெருமூச்சு அவளிடமிருந்து வெளிவந்தது.

சட்டென்று அவளுக்குத் தன் தோழி விமலாவின் நினைவு வந்தது. அவள் எவ்வளவு பாக்கியசாலி!

ஜனகத்தின் மனம் கட்டவிழ்த்த காளைபோல் பழைய சம்பவங்களை நோக்கிப் பாய்ந்தது.

## 2

"ஜனகம்!" என்று கூப்பிட்டுக் கொண்டே துள்ளிக் குதித்தவாறு வரும் விமலாவைக் கண்டதும், தன் கைக் காரியத்தை அப்படியே போட்டுவிட்டு எழுந்தாள் ஜனகம்.

"என்ன விமலா, அண்ணா வந்துட்டாரா? என்ன சமாசாரம்?"

"ஆமாண்டி, அவாள்ளாம் நாளைக்குக் காலம்பற பத்து மணிக்கு வாராளாம்" என்றாள் விமலா வெட்கம் கலந்த புன்னகையுடன்.

"அதிர்ஷ்டக்காரிடி, நீ! வரப்போகிறவருக்குக் கட்டாயம் உன்னைப் பிடித்துப் போய்விடும். அப்புறம் கல்யாண மோக்ஷாவில் என்னை எங்கே நீ ஞாபகம் வச்சுக்கப்

போதே?" என்று ஜனகம் சொல்லும் போதே பிரிவின் எல்லை கடந்த சோகம் அவள் குரலில் பிரதிபலித்தது.

"போடி, நீ ஒண்ணு! என்னவோ சொல்வார்களே, 'அடங்கறத்துக்கு...'ன்னு! அது மாதிரி என்னவோ இப்பவே கல்யாண மாயிட்ட மாதிரி பேசறியே!—சரி, நான் வரட்டுமா? நாழியாச்சு!" என்று சொல்லிக் கொண்டே விமலா ஓடிவிட்டாள் நாணத்துடன்.

ஜனகம் பெருமூச்சு விட்டாள். "அவள், வயதுப் பெண்தான் விமலாவும். அவளுக்குக் கல்யாணத்திற்காக ஏற்பாடுகள் நடக்கின்றன. இங்கே......?

விமலா பணக்காரி. நன்றாகச் சிவப்பாக இருப்பாள். அவளைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளக் கசக்கிறதோ வருகிறவனுக்கு?

ஆனால் ஜனகம் ஏழை. "அழகு மட்டும் இருந்து என்ன பயன்? அதிர்ஷ்டம் வேண்டாமா?" என்று அடிக்கடி ஏங்குவாள் ஜனகம். அவள் தாயார் செல்லம்மாள் விமலாவின் வீட்டில் சமையல் வேலை செய்து வந்தாள். தகப்பனாரை ஞாபகமே



சூட்டுக்காரர்:—மணி மூன்றாகப் போகிறது; எனக்கு மூன்றாம் நம்பர் பஸ் கிடைத்து விடும்......!

வேஷ்டிக்காரர்:— அடேடே! அப்படியானால், நான் ஏற வேண்டிய ஐம்பத்திமூன்றாம் நம்பர் பஸ் வரவே வராதோ?

இல்லை ஜனகத்திற்கு. அவ்வளவு சிறு வயதில் போய்விட்டார் அவர். ஆதரவுக்கும் வேறு மனிதர் இல்லாமல் ஏதோ விமலாவின் தாயார் காட்டிய ஆதரத்தினால் இவ்வளவு வருஷங்கள் ஓடின.

வயது வந்த பெண்ணை வீட்டில் வைத்துக் கொண்டு நெருப்பின்மீது இருப்பவள் போல் துடித்தாள் செல்லம்மாள். தாயார் ஸ்தானத்தில் இருந்த அவள் யௌவனப் பெண்ணின் மனது கனவையும் ஆசாபாசங்களையும் நன்கு அறிவாள். ஆனால் அவளால் முடியுமா? விமலாவுக்கு இரண்டாயிர ரூபாய் கொடுத்துத்தான் கல்யாணம் செய்யப் போகிறார்கள். சுமாரான மாப்பிள்ளையாகத் தேடினாலும் கல்யாணம் செய்யவாவது பணம் வேண்டாமா என்று வருந்தினாள் செல்லம்மாள். விமலாவின் தாயார் சிபாரிசின் பேரில் அவளுடைய தகப்பனார் ஜனகத்திற்காக ஒரு வரனைக் கொண்டு வந்தார்.

மாப்பிள்ளைக்கு வயது ஐம்பத்திரண்டு தான். மூன்றாம் கல்யாணம். முதலிரண்டு மனைவிகளுக்கும் குழந்தை குட்டிகள் இல்லை. வரன் ஆத்மநாதய்யர் கல்கத்தாவில் எங்கேயோ பெரிய உத்தியோகத்தில் இருக்கிறார். ஆஸ்தி நிறைய இருக்கிறது. சந்ததிக்காகத்தான் மறுமணம் செய்து கொள்கிறார். பெண்ணுக்கு உடம்பு பூராவும் வைரமாகவே இழைத்துவிடுவார். இவ்வளவுதான் விமலாவின் தகப்பனார் கொண்டு வந்த தகவல்.

"செல்லம், யோசனை பண்ணாமே முடிச்சுடு! வயசு மட்டும் அவ்வளவு இல்லேன்னா நானே விமலாவைக் கொடுத்துடுவேன்!" என்றாள் விமலாவின் தாயார்.

செல்லம்மாளின் முகம் கறுத்தது. "ஐம்பத்திரண்டா? எனக்கே நாற்பது தானே ஆகிறது!" என்று அவள் யோசித்தாள். பிறகு சொல்லுவதாகக் கூறிவிட்டு வீட்டிற்கு வந்துவிட்டாள்.

அவள் நுழைந்ததுமே, "ஏனம்மா, விமலாவைப் பார்க்க வரப் போறாளாமே?" என்றாள் ஜனகம் ஆவலுடன்.

"ஆமாம்" என்று அசிரத்தையாகப் பதில் கூறிவிட்டு உள்ளே போன தாயாரை வியப்புடன் பார்த்தாள் ஜனகம்.

"என்னம்மா, ஏன் ஒருமாதிரி இருக்கிறாய்?" என்று அவள் நச்சரித்ததைத் தாங்கமாட்டாமல் விஷயத்தை ஒரு வழியாக அவளிடம் கஷ்டப்பட்டுக் கூறிவிட்

# படித்துப் பார்!

## ராஜாஜி

ராஜாஜியின் எழுபதாவது பிறந்த தின வைபவத்தை யொட்டி "ஹிந்துஸ்தான்" பத்திரிகை வெளியிட்ட ஒரு விசேஷ மலர் தமிழ் மக்களிடையே ஒரு பெரும் பரபரப்பை உண்டாக்கியது. குறைந்த விலையில் மிகவும் அற்புதமான முறையில் வெளிவந்த அம்மலர்ப் பிரதிகள் வெளிவந்த கொஞ்ச காலத்திற்குள் விற்பனையாகிவிட்டன. மேற்கொண்டு அம்மலர் வேண்டும் என்றவர்களுக்கு ஏமாற்றமே ஏற்பட்டது. அந்த ஏமாற்றத்தைப் போக்குவதற்காக "ஹிந்துஸ்தான்" காரியாலயத்தார் இப்போது ஒரு அருமையான ஏற்பாடு செய்திருக்கிறார்கள். மேற்படி மலரில் வெளிவந்த பல சிறந்த கட்டுரைகளைத் தொகுத்து, கைக்கு அடக்கமாகவும் படிப்பதற்குச் சௌகரியமாகவும் இருக்கக்கூடிய முறையில் ஒரு அழகிய புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள். ராஜாஜியுடன் நெருங்கிப் பழகியவர்களும் தமிழ்நாட்டு அரசியலில் பிரபலமாக விளங்குபவர்களுமான டாக்டர் ராஜன், டி. டி. கிருஷ்ணமாச்சாரி போன்ற பல அறிஞர்கள் எழுதிய இருபதுக்கு மேற்பட்ட கட்டுரைகள் இதில் அடங்கியிருக்கின்றன. நேருஜி சென்னைக்கு வந்தபோது ராஜாஜியின் 'உருவப் படத்தைத் திறந்துவைத்துச் செய்த சொற்பொழிவும் கடைசியில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்த அருமையான புத்தகத்துக்கு ரசிகமணி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் ஒரு சிறந்த முகவுரை எழுதியிருக்கிறார்கள். விலை ரூ. 2-8-0. விலாசம்: "ஹிந்துஸ்தான்" பதிப்பகம், 69, பீட்டர்ஸ் ரோட், சென்னை.

## சங்கம்

கண்ணைப் பறிக்கும் பல வர்ணப் படங்களுடன் வெகு தடபுடலாக ஒரு ஹிந்தி மாதப் பத்திரிகை பம்பாயிலிருந்து வெளிவந்திருக்கிறது. இதை ஒரு முறை புரட்டிப் பார்க்கும்போது, இது புதிய பத்திரிகையாகவே தோன்றவில்லை; வெகு காலமாக நடந்து வரும் பண்பட்ட பழம் பத்திரிகையைப் போலப் பல வகையிலும் சிறப்பாக அமைந்திருக்கிறது. இதற்குக் காரணம், பத்திரிகை புதிதாயிருந்த போதிலும் அதன் ஆசிரியர் பழமையானவராக இருப்பதுதான். ஆங்கிலம் படித்தவர்கள் எல்லோரும் 'குவாஜா அஹம்மது அப்பாஸ்' என்ற பெயரைக் கேள்விப்பட்டிருப்பார்கள். அந்தப் புகழ் பெற்ற எழுத்தாளர் இந்தப் பத்திரிகைக்கு ஆசிரியராக இருக்கும்போது, பத்திரிகை சிறப்பாக வெளிவந்திருப்பதற்குக் கேட்கவா வேணும்? விலை அணா 12; விலாசம்: அத்வானி சேம்பர்ஸ், பெரோஷ் ஷா மேத்தா ரோடு, பம்பாய்.

## வாழ்க்கைக்கான கல்வி

வெறும் உத்தியோகத்துக்காகப் படிக்கும் படிப்பு பயனற்றது. தன் முயற்சி, உடல், உள்ளம், உயிர் மூன்றும் கல்வியின் மூலம் ஒற்றுமையாக வளர்ச்சி அடைய வேண்டும். மகாத்மா காந்தி காட்டிய ஆதாரக் கல்வியும் அதைத்தான் வலியுறுத்துகிறது. இக் கருத்து இந்நூலில் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. மூல ஆசிரியர்: ஆம்ஸ்ட்ராங்; மொழிபெயர்ப்பு: மு. அருணாசலம்; பிரசுரம்: தமிழ்நூலகம், திருச்சிற்றம்பலம், மாத்துரை போஸ்ட், குத்தாலம் வழி; விலை: அணா 5.

## ஓம் சாந்தி

அருள் வாக்கியம், ஞானப் புதிர், தோம்ருதம், ஸ்ரீ ராமநாமம், கீர்த்தனை முதலிய பல அம்சங்களுடன் வெளிவந்திருக்கும் இந்தப் பத்திரிகை, வேதாந்த தத்துவத்தையும் ஆத்ம விசாரணையையும் பற்றிக் கூறுவதோடு உங்கள் ராசிபலனையும் கூறுகிறது. ஆசிரியர்: சாந்த ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமிஜி, சாந்தி ஆசிரமம், வேங்கடபுரம், அம்பத்தூர் போஸ்டு, விலை: அணா 4.

## ஸ்ரீ பகவத் கீதை (அனுபவ உரை)

கிருஷ்ண பகவான் பார்த்தசாரதியாகப் போர்க்களத்தில் பார்த்தனுக்கு உபதேசித்த பகவத் கீதைக்கு ஆதிசங்கரர் விரிவான உரை எழுதினார். அந்த உரையை மறந்து இந் நூலாசிரியர் புதிய உரை எழுதியிருக்கிறார். இயற்றியவர்: வானாடி கிருஷ்ண சர்மா, 140, மலைக்கோட்டை வடக்குத் தெரு, திருச்சிராப்பள்ளி; விலை: 1-4-0.

தெரியும். நீங்கள் உங்கள் தந்தையின் கட்டளைப்படி அதிசயப் பொருள்கள் வாங்க அலைந்ததும் எனக்குத் தெரியும். நான்தான் உங்கள் சகோதரர் ஹுசேனுக்கு மந்திரக் கம்பளமும், அலிக்கு தந்தக்குழாயும், உங்களுக்குச் செயற்கை ஆப்பிளும் என் ஆட்கள் மூலம் அனுப்பி வைத்தேன். இதிலிருந்து உங்களைப் பற்றியும், உங்கள் சகோதரர்களைப் பற்றியும் எனக்கு எல்லாம் தெரியும் என்பதை நீங்கள் அறிவீர்கள். நளிமைவிட எல்லாவிதத்திலும் உயர்ந்த ஒரு பெண்ணை மணந்து கொள்ள நீங்கள் தகுதியுள்ளவர் என்று எனக்குத் தோன்றிற்று. அதனால்தான் நீங்கள் அம்பு எய்தவுடன் நான் அதைக் கைப்பற்றி இங்கு கொண்டு வந்தேன். நீங்கள் அதைத் தேடி வருவீர்கள் என்பதும் எனக்குத் தெரியும். அதைத் தேடி வந்தால் என் இருப்பிடம் வந்து சேருவீர்கள் என்பதும் எனக்குத் தெரியும். நீங்கள் கடைசியில் இங்கு வந்து சேர்ந்ததிலிருந்தே நான் நினைத்ததில் தவறு ஒன்றுமில்லை என்பது உங்களுக்கு நன்றாகத் தெரிகிறதல்லவா?"

இனிமை ததும்பும் இவ் வார்த்தைகளைக் கேட்ட அஹமத் அளவில்லாத ஆனந்தத்தில் ஆழ்ந்தான். (தொடரும்)

|  |  |  |  |  |
|---|---|---|---|---|
|  | 6 | 5 |  |  |
|  |  |  | 16 | 10 |
| 11 | 20 |  |  |  |
| 9 |  |  | 15 | 18 |
|  | 13 | 19 | 7 |  |

இந்தச் சதுரத்தில் 1 முதல் 25 வரையிலும் உள்ள 25 எண்களைப் புகுத்த வேண்டும். அவற்றில் 12 எண்கள் ஏற்கெனவே புகுத்தப்பட்டிருக்கின்றன. பாக்கி 13 எண்களையும் நீங்கள் நுழைக்க வேண்டும். ஒவ்வொரு வரிசையையும் கூட்டினால் மொத்தம் 65 வரவேண்டும்.

1, 2, 3, 4, 8, 12, 14, 17, 21, 22, 23, 24, 25,

## எட்டுக்  கேள்விகள்

மாணவர்களில் இரண்டு வகை உண்டு. ரொம்பக் கஷ்டப் பட்டுப் படித்து முதல் மார்க் வாங்குவார்கள் சிலர்; கஷ்டப் படாமலேயே புத்திசாலித் தனத்தால் முதல் மார்க் வாங்குவார்கள் வேறு சிலர். நம்முடைய அரசியல் நிர்ணய சபைத் தலைவர் ஸ்ரீ ராஜேந்திரப் பிரசாத் இரண்டாவது வகையைச் சேர்ந்தவர்.

அவர் காலேஜில் படித்துக் கொண்டிருந்தபோது, ஒரு முறை பரீட்சை நடந்தது. மாணவர்கள் வினாத் தாளை வாங்கி ஆவலாகப் படித்துப் பார்த்தார்கள். அவர்கள் எதிர்பார்த்த கேள்வி ஒன்றாவது வரவேண்டுமே, இல்லை! வினாத்தாளைப் பார்ப்பதும் திகைப்பதுமாக இருந்தார்கள்.

ராஜன் பாபுவும் வினாத்தாளைப் பார்த்தார். அவரும் திகைத்தார். ஆனால், ராஜன் பாபு திகைத்தது வேறொரு காரணத்துக்காக. 'எட்டுக் கேள்விகளில் எந்த நான்கு கேள்விகளுக்காவது பதில் எழுதினால் போதும்' என்று வினாத்தாளில் எழுதப்பட்டிருந்தது. எட்டுக் கேள்விகளும் அவருக்குச் சுலபமாக இருந்தன. ஆகையால் அவற்றில் எந்த நான்கு கேள்விகளுக்குப் பதில் எழுதுவது என்று தெரியாமல் திகைத்தார்.

கால் மணி ஆயிற்று; அரை மணி ஆயிற்று; ஒரு மணியும் ஆயிற்று. கடைசியில் அவர் ஒரு முடிவு செய்தார். எட்டுக் கேள்விகளுக்குமே பதில் எழுதி விட்டார். விடைகள் எழுதி முடித்த பிறகு அவற்றிற்குக் கீழே கீழ்க்கண்ட ஒரு சிறு குறிப்பையும் எழுதி வைத்தார்: "ஐயா, பரீட்சாதிகாரியே, எட்டுக் கேள்விகளுக்குமே விடை எழுதி விட்டேன். ஆனால், ஏதாவது நான்கு விடைகளுக்கு மாத்திரம் நீங்கள் மார்க் போட்டால் போதும்!"




ராஜன் பாபுவுக்கு அந்தப் பரீட்சையில் முதல் மார்க் கிடைத்தது என்பதைச் சொல்லவா வேண்டும்?



களைப் பார்த்து அதே திசையில் நடந்தான். இரு புறங்களிலும் கவனமாகப் பார்த்துக்கொண்டே சென்றான். வெகு தூரம் சென்றும் அம்பு அகப்படவில்லை. இனி அதைத் தேடிப் பிரயோசனம் இல்லை என்றுகூட நினைத்து விட்டான். ஆனால் திரும்பிப் போக அவன் விரும்பவில்லை. மேலும் நடந்து போகும் போது, செங்குத்தான ஒரு பாறையை அடைந்தான். அந்தப் பாறை அருகில் வந்தவுடன் அங்கு ஒரு அம்பு விழுந்து கிடந்தது. அதை எடுத்துப் பார்த்தவுடன், அது தான் எய்த அம்பு என அறிந்து ஆச்சரிய மடைந்தான்.

“இது என்ன விசித்திரம்? எந்த மனிதனும் ஒரு அம்பை இவ்வளவு தூரத்தில் விழும்படி எய்ய முடியாதே! இதில் ஏதோ மர்மம் இருக்கிறது. அதை எப்படியாவது அறியவேண்டும்” என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். இப்படி யோசித்துக் கொண்டு சுற்றிப் பார்க்கையில் அந்தச் செங்குத்தான பாறையில் ஒரு சிறு வழி தெரிந்தது. அந்த வழியருகே சென்று கவனிக்கையில் அதை அடைத்துக் கொண்டு ஒரு இரும்புக் கதவு இருப்பது தெரிந்தது. உடனே அஹமத் அந்தக் கதவை மெதுவாகத் தள்ளினான். கதவும் திறந்து கொண்டது. சற்று நகர்ந்து உள்ளே சென்று பார்த்த போது ஒரே பிரகாசமாயிருந்தது. ஒரு அழகான அரண்மனையை அங்கே கண்டான். எங்கேயோ கண் காணாத இடத்தில், ஒரு பாறையின் உட்புறத்தில் இவ்வளவு அழகான அரண்மனை இருப்பதைக் கண்டு அஹமத் ஆச்சரிய மடைந்தான். அந்த அற்புத அரண்மனையை ஒருமுறை நின்ற இடத்திலிருந்தே சுற்றிப் பார்ப்பதற்குள் அவனை நோக்கி மிக அழகு வாய்ந்த ஒரு பெண்மணி வந்தாள். அவளைப் பார்த்தபோது அரண்மனையின் சொந்தக்காரி அவளாகத்தான் இருக்க வேண்டும் என்று அஹமதிற்குத் தோன்றியது. அவளை அஹமத் நன்கு பார்த்தான். உலகத்தில் அவள் மாதிரி அழகு வாய்ந்தவளை அவன் பார்த்ததே இல்லை. அவளுடைய ஆடை ஆபரணங்களைப் போல உயர்ந்தவைகளையும் அவன் பார்த்தது இல்லை. அவளைச் சுற்றி அவளுக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்த பெண்மணிகளும் அவளைப் போலவே அழகிற் சிறந்தவர்களா யிருந்தனர்.

இத்தனை அழகிகளையும் பார்த்து ஸ்தம்பித்துப் போன அஹமத் அரண்மனையின் தலைவியைப் பார்த்து இலேசாகத் தலை வணங்கினான். பேசுவதற்கு நாவெழவில்லை. ஆனால் குகை ராணி அஹமதைப் பார்த்து, “இளவரசரே, வாருங்கள்” என்றாள். இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் அஹமத் அடைந்த ஆச்சரியத்திற்கு அளவே இல்லை. தனக்கு முன் பின் தெரியாத ஒருத்தி தன்னை எப்படிப் பெயர் சொல்லி அழைக்க முடியும் என்று வியப்புற்றான். அவன் ஆச்சரியத்திற்குள்ளாகி மயங்கி நிற்கையில், அந்த அழகு சுந்தரி அருகிலிருந்த ஒரு மணி மண்டபத்திற்கு அவனை அழைத்துச் சென்றாள். அந்த மண்டபத்தின் வேலைப்பாடும், விமரிசையும் பார்ப்பவர் கண்ணைப் பறித்தது. மண்டபத்தை அடைந்ததும் அவள் அஹமதை தனது அருகில் ஒரு சிறந்த ஆசனத்தில் அமரச் செய்தாள். இளவரசன் உட்கார்ந்தவுடன் அந்தப் பெண்ணரசி பேசத் தொடங்கினாள்:

“உங்கள் பெயர் எனக்கு எப்படித் தெரியும் என்று நீங்கள் ஆச்சரியப் படுகிறீர்கள். நான் ஒரு தேவ கன்னிகை. மிகவும் மந்திர சக்தி வாய்ந்த ஒரு தேவமாதின் புத்திரி. என் பெயர் பானு. நஸீமை விவாகம் செய்து கொள்ள நீங்களும் உங்கள் இரு சகோதரர்களும் எவ்வளவு பாடு பட்டீர்கள் என்பது எனக்குத்

னத்திற்குச் செல்லுங்கள். நானும் என் மந்திரிகளும் அங்கு வருகிறோம். நீங்கள் ஒவ்வொருவரும் வில்லில் பூட்டி ஒரு அம்பை எய்யுங்கள். யாருடைய அம்பு நீண்டதூரம் போகிறதோ அவனுக்கு கனீமை விவாகம் செய்து கொடுக்கத் தயாராயிருக்கிறேன்."

ரா.நா.

தங்கள் தந்தை கூறிய யோசனை நியாயமானதுதான் என்று மூன்று இளவரசர்களும் ஒப்புக்கொண்டனர். மூவரும் வில்லையும் அம்பையும் எடுத்துக் கொண்டு மைதானத்தை நோக்கிச் சென்றனர். சுல்தானும் அங்கு விரைவில் வந்து சேர்ந்தான். அவனுடன் ஏராளமான பிரபுக்களும் மற்றப் பரிவாரங்களுடன் வந்து சேர்ந்தனர். எல்லாம் தயாரானவுடன் முதலில் ஹுசேன் வில்லைப் பூட்டி அம்பு ஒன்றை எய்தான். அடுத்தபடியாக அலி அம்பு எய்தான். ஹுசேனின் அம்பு விழுந்த இடத்திற்கு அப்பால் சென்று அலியின் அம்பு விழுந்தது. கடைசியாக அஹமத் எய்த அம்பு முதல் இரண்டு அம்புகளையும் தாண்டிச் சென்றது. ஆனால் அது எங்கே விழுந்தது என்று யாராலும் கண்டுபிடிக்க முடியவில்லை. எவ்வளவு தேடியும் அந்த அம்பு அகப்படவில்லை. இந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்தவர்களெல்லாம், அஹமதின் அம்புதான் அதிக தூரம் சென்றிருக்க வேண்டும் என எண்ணினார்கள். ஆனால் அவனுடைய அம்பு அகப்படாததால், அவன்தான் ஜெயித்தான் என முடிவுசெய்ய முடியவில்லை. ஆகையால் அலியின் அம்புதான் மிகுந்த தூரம் சென்றது என சுல்தான் முடிவுசெய்து, கனீமை அவனுக்கே கலியாணம் செய்து கொடுப்பதெனத் தீர்மானம் செய்தான். கலியாணத்தைச் சில நாட்களில் நடத்துவதற்கும் ஏற்பாடு செய்தான்.

கனீம் தனக்கு மனைவியாக வாய்க்கவில்லையே என்று ஹுசேன் மிகவும் வருத்தமடைந்தான். தன் தம்பியின் கலியாண விருந்தில் கலந்து கொள்ள அவன் மனம் ஒப்பவில்லை. அரண்மனையிலேயே இருந்தால் துக்கம் தன்னைக் கொன்று விடும் என அஞ்சினான். தன் தந்தைக்குப் பிறகு தனக்குச் சிம்மாசனம் வேண்டாம் என்று சொல்லி விட்டு அந்த நாட்டை விட்டுப் புறப்பட்டான். ஆயுள் உள்ள வரையில் துறவியாக வாழ்வதென முடிவு செய்தான். ஒரு முஸ்லிம் மத குருவிடம் சிஷ்யனாக அமர்ந்தான். சதா காலமும் ஜபதபம் செய்வதும் பிறருக்கு உதவி செய்வதுமாகக் காலத்தை மனச் சாந்தியுடன் கழித்தான்.

கனீமை இழந்த அஹமதிற்கும் அதிருப்தியும் கவலையும் ஏற்பட்டது. ஆனால் அவன் ஹுசேனைப் போல உலக வாழ்க்கையைத் துறக்க விரும்பவில்லை. கலியாண வைபவம் முடிந்த பிறகு தனது அம்பு எங்கு விழுந்தது என்று தேடுவதற்காகப் புறப்பட்டான். ஏனெனில் தனது அம்புதான் அதிக தூரம் சென்று விழுந்திருக்கும் என அவன் நிச்சயமாக நம்பினான். அவனுடைய மற்ற சகோதரர்களின் அம்புகள் விழுந்த இடங்



# மாய மாளிகை

## 4. யார் அந்த அழகி?

புதல்வர்கள் வாங்கிக்கொண்டுவந்த பொருள்களைப் பார்த்தான் சுல்தான். அவற்றின் சக்தியைக் கேட்டு அவன் பிரமித்தான். அப்போது அஹமத் தன் தந்தையை நோக்கி, "தந்தையே! நளீமை யார் அடைவது என்பதை முடிவு செய்து சீக்கிரம் சொல்லுங்கள்" என்றான்.

அதைக் கேட்டதும் சுல்தான் பிரமிப்பிலிருந்து விடுபட்டு ஆழ்ந்த யோசனைக்கு உள்ளானான். மூவரும் வாங்கி வந்த பொருள்களில் எது மிகவும் அதிசயமானது என்று முடிவு செய்வது சுலபமாகத் தோன்றவில்லை. ஒவ்வொன்றும் ஒரு விதத்தில் சிறந்ததாக இருந்தது. ஆகையால் சுல்தான் நீண்ட நேரம் ஆலோசனை செய்து கடைசியில் தன் குமாரர்களைப் பார்த்துக் கூறினான்:

"என் அருமைக் குமாரர்களே! உங்களில் யாருக்கும் நளீமைக் கொடுப்பதற்கில்லை. இப்போது விஷயம் மிகவும் சிக்கலாகி விட்டது. இளவரசன் அஹமத் கொண்டு வந்த செயற்கை ஆப்பிள் மூலம்தான் நளீம் பிழைத்து எழுந்தான் என்பது உண்மைதான். ஆனால் அலியின் தந்தக் குழாய் மூலம் நளீம் சாகக் கிடக்கிறான் என்பது தெரியாவிட்டால் செயற்கைப் பழத்தால் என்ன பிரயோசனம்? அது மாத்திரமா? ஹுசேனின் மந்திரக் கம்பளம் இல்லாவிட்டால் இவ்வளவு சீக்கிரம் வந்து நளீமைக் காப்பாற்றியிருக்க முடியுமா? அலியின் தந்தக்குழாய் மூலம்தான் நளீமின் அபாய நிலையை அறிய முடிந்தது என்பது உண்மைதான். ஆனால் ஹுசேனின் மந்திரக் கம்பளமும், அஹமதின் ஆப்பிள் பழமும் இல்லாவிட்டால் காரியம் கைகூடியிருக்குமா? கம்பளம், குழாய், ஆப்பிள் மூன்றும் அதிசயப் பொருள்கள் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால் இம்மூன்றில் ஒன்று மற்றொன்றைவிட உயர்ந்தது என்று கூற முடியாது. ஆகையினால் நளீமை உங்கள் யாருக்கும் மணம் செய்து கொடுக்க முடியாது. இந்த முடிவு மிகவும் நியாயமானது என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள். ஆனால் நான் மற்றொரு யோசனை கூறுகிறேன். உங்கள் ஆசை நிறைவேற வேண்டுமானால் அதன்படி நீங்கள் நடக்க வேண்டும். நீங்கள் ஒவ்வொருவரும் வில்லையும் அம்பையும் எடுத்துக் கொள்ளுங்கள். நமது குதிரைகளுக்குப் பயிற்சி அளிக்கப்படும் மைதா

கண்டதிலிருந்தே, அவளுக்கு அவன் மீது ஓர் அதனை அன்பு உண்டாயிற்று. அவனோடு பேச்சுக் கொடுத்துப் பார்த்தாள். அவனும் அவளோடு எண்ணினாற்போல் எட்டு வார்த்தைகள் தான் பேசுவான்.

* * *

ஒரு சமயம் சத்தியாவின் பழைய தோழி ஒருத்தி ஆசிரமத்தைப் பார்த்து விட்டுச் செல்வதற்கு வந்தாள். அவள் ஆசிரமப் பெண்ணாக வரவில்லை. ஏதோ ஒரு சிறு ராஜ்யத்து ராணியாக வந்தாள். அவள் தலையில் கிரீடம் ஏறியிருந்தது. சில படை வீரர்கள் புடை சூழ, அவள் பல்லக்கில் வந்து இறங்கினாள்.

சத்தியா ஒரு மரத்தடியில் நின்று இதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். பல்லக்கிலிருந்து அவளுடன் ஒரு அரசனும் இறங்கினான். சேடி பின்னால் தொடர்ந்து வர, ராணி தன் புருஷனின் கையைக் கோர்த்துக் கொண்டு நடந்து வந்தாள்.

சத்தியாவிற்குத் தனியாக நிற்பது என்னவோ போலிருந்தது. எங்கேயாவது ஓடி ஒளிந்து கொள்ளலாமா என்று கூட அவளுக்குத் தோன்றியது. அதற்கேற்றாற் போல வந்தவளும் சத்தியாவைப் பார்த்து, "என்னடி சத்தியா, நீ இன்னும் இங்கேதான் இருக்கிறாயா? என்னைப்போல நீயும் ஏதாவது ஒரு ராஜ்யத்துக்கு ராணியாகி யிருப்பாய், உன்னை ஆசிரமத்தில் பார்க்க முடியாது என்று அல்லவா நினைத்துக்கொண்டு வந்தேன்?" என்று விசாரித்தாள். உடனே சத்தியாவின் மலர் முகம் குவிந்து மொட்டாயிற்று.

சத்தியாவை அவளுடைய தோழி க்ஷேமம் விசாரித்து விட்டு, மற்றைய ஆசிரம வாசிகளைப் பற்றி விசாரித்தாள்.

"இப்போது ஜானகி இங்கே இருக்கிறாள் அல்லவா?"

"எந்த ஜானகி?"

"அவள்தான் வியாகரண ஆசாரியர் கௌதமரின் பெண்."

"அவள் கல்யாணமாகிக் காந்தார ராஜ்யத்திற்குப் போய் விட்டாள்."

"விஜய ஸ்ரீ?"

"அவளுக்கும் கல்யாணமாகி விட்டது."

"வித்யா இங்கு இருக்கிறாளா?"

"அவளும் போய் விட்டாள். யாரோ ஒரு மந்திரி குமாரன் அவளை விவாகம் செய்து கொண்டு, அழைத்துச் சென்று விட்டான்."

அடுத்த கேள்விதான் சத்தியாவை மீண்டும் ஒரு முறை மிகவும் கலக்கியது.

"அப்படியானால், நம் பழைய கோஷ்டியில் நீ ஒருத்திதான் இங்கே இருக்கிறாயா?"

சத்தியாவுக்கு வாழ்க்கையே பிடிக்கவில்லை. அவளையொத்த பழைய சகிகளும் சென்று விட்டனர். அக்னி குண்டம் வளர்க்கும் ரிஷிகளுக்கும் பதி சேவை புரியும் ரிஷி பத்தினிகளுக்கும் இடையில் அவளது வாழ்க்கை சுவைக்கவில்லை. ஒரு நாள் அவள் வைசம்பாயனரிடம் சென்று தைரியமாக, "அப்பா, விதேக ராஜகுமாரனின் படிப்பு எப்போது முடிகிறது?" என்று கேட்டாள்.

"அவன் கற்பதற்கு இனி ஒன்றும் இல்லை" என்று ஒரே வாக்கியத்தில் பதில் சொன்னார் வைசம்பாயனர்.

ரவியின் கல்வி விரைவில் முடிந்தது. ஆசிரமத்து வழக்கத்தின்படி அவன் விடை பெற்றுக் கொள்ள சத்தியாவினிடம் வந்தான். அவள் வழக்கத்தினின்று வழுவாமல், அவனையும் பரீட்சிப்பது போல் சில கேள்விகள் கேட்டாள். வைசம்பாயனர் கூறியிருந்தபடி 'பிரம்மச்சர்ய'த்தைப் பற்றித்தான் அவள் எப்போதும் கேள்விகள் கேட்பது வழக்கம். அவளையே நினைத்துக் கொண்டு பிரம்மசரியத்தைப்பற்றி பதில் சொல்லும் அரச குமாரர்கள் தோல்வியுற்றதில் அதிசயம் இல்லை. ஆனால் ரவி அதற்கு விதி விலக்காக விளங்கினான்.

ரவி பிரம்மசரியத்தின் பெருமையை அற்புதமாக விளக்கிக் கூறிவிட்டு முடிவில் சொன்னதாவது: "ஆகையால் நான் பிரம்மசாரியாகவே இருக்கப் போகிறேன்!"

---

## அவள் கருணை !



பெண்மணி:— ஐயோ பாவம்! இந்த வாயில்லா ஜீவன் மேலே நிறையச் சுமையை ஏற்றியிருக்கிறாயே? உனக்கு இரக்கம் இல்லையா?

வேண்டி என்னிடம் தூது அனுப்பிய போது, நானாகவே உன் மனதை யறிந்து கொண்டு, 'என் பெண்ணுக்கு இஷ்டமில்லை' யென்று சொல்லி யனுப்பிவிட்டேன். அதில் அவனுக்கு என் மீது சற்றுக் கோபம். ஆதலால் முகத்தில் அறைந்தாற் போலப் பதில் அனுப்புவது சரியல்ல."

"நான் ஒவ்வொருவனையும் நான்கைந்து கேள்விகள் கேட்பேன். எவன் எனக்குச் சரியான பதில் தருகிறானோ, அவனையே நான் மணம் புரிந்து கொள்ளுவேன் என்று நீங்கள் சொல்லி வையுங்கள். யார் வேண்டுமானாலும் வரட்டும். நான் பார்த்துக் கொள்கிறேன்."

வைசம்பாயனர் ஆசிரமத்தை நோக்கி விரைந்து நடந்தார்.

* * *

சத்தியா தன்னை விவாகம் செய்து கொள்ள விரும்பிய ராஜ குமாரர்களையெல்லாம் பரீட்சிப்பது என்ற வழக்கம் ஆரம்பித்த விதம் மேலே கூறியுள்ளதுதான்.

வைசம்பாயனர் நடுக் கானகத்தில் இருந்துகொண்டு ஒரு பெரும் கலாசாலையை நடத்தி வந்தார். அரச குமாரர்கள் அவரிடம் வந்து பல வருஷங்கள் தங்கி, பல நூல்கள் கற்றுக் கொண்டு செல்வார்கள். அவருக்குக் கீழ் இரண்டு மூன்று ஆசாரியர்கள் உண்டு. அவர்களுடைய பெண்களே சத்தியாவின் சகிகள்.

தந்தையோடு சதா பழகியதால், இளமையிலிருந்தே அவளுக்கு நல்லறிவு வளர்ந்தோங்கி வந்தது. அரச குமாரர்கள் படிக்கும் பாடம் அவ்வளவும் அவளுக்குத் தலைகீழ்ப் பாடம். அவளுக்கு இணையாகத் தர்க்கம் செய்வது அரிது.

ஆசிரம வாழ்க்கையில் சத்தியா காட்டு ரோஜாவைப் போல வளர்ந்திருந்தாள். கண்வ முனிவரின் வளர்ப்புப் பெண் சகுந்தலைக்குக் கூட அவ்வளவு அழகு இருந்திருப்பது சந்தேகந்தான். கானகத்துப் பொருள்களே அவள் மேனியைச் சிங்காரித்தன. இயற்கையில் வந்த அழகை, அவள் இயற்கையாலேயே வளர்த்து வந்தாள்.

அழகுத் தெய்வமான அவளை அடைவதற்காக ஒவ்வொரு ராஜகுமாரனும் ஆசைப்பட்டான். ஒவ்வொருவனும் 'எப்போது என் வாசிப்பு முடியும்?' என்று தவித்துக் கொண்டிருப்பான். "நீ இன்னும் ஒரு மாதத்தில் ராஜ்யத்திற்குத் திரும்பலாம். உன் வாசிப்பு அநேகமாக முடிந்து விட்டது" என்ற சொற்கள் எப்போது குருவினிடமிருந்து வரும் என்று ஒவ்வொருவனும் சதா எதிர்பார்த்த வண்ணமாக இருப்பான். அனுமதி கிடைத்ததும், சத்தியாவின் கேள்விகளுக்குப் பதில் சொல்வதாக முன் வருவான். அவள் கேட்கிற கேள்விகளுக்கு ஏதேனும் உளறிவிட்டுத் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு, தன் வழியே செல்வான்—"இப்படி ஆகும் என்று தெரிந்திருந்தால், அவ்வளவு சிரமப்பட்டு வாசித்திருக்கவே மாட்டேனே!" என்று சொல்லிக் கொண்டு செல்வான்.

சத்தியாவும் சளைக்காமல் எல்லா அரச குமாரர்களையும் நிராகரித்து வந்தாள். வைசம்பாயனரே அவளிடம் ஒரு சமயம் "நீ எல்லோரையும் நிராகரித்து வருகிறாயே, அம்மா! உனக்குப் பிடித்த ஒருவனை மணந்து கொண்டு, நீ சுகமாய் வாழ வேண்டும் என்பதைத்தான் நான் விரும்புகிறேன். அதை மறந்துவிடாதே!" என்று கூறினார்.

ஒருநாள் வைசம்பாயனர் பூப் பறித்துக் கொண்டிருந்தார். சத்தியா வந்து அவர் பின்னால் நின்றாள்.

"அப்பா, புதிதாய் வந்திருக்கிறாரே அவர் யார்?"

இக் கேள்வியைக் கேட்டதும், வைசம்பாயனர் சத்தியாவின் பக்கம் திரும்பி அவள் முகத்தைக் கவனித்தார். அவள் முகம் சிவந்ததை அவர் கவனித்ததாகக் காட்டிக் கொள்ளவில்லை.

"நீ யாரைச் சொல்கிறாய், அம்மா?"

"சிவப்பாக ஒருவர் புதிதாய் வந்திருக்கிறாரே, அவர்தான்!"

"யாரது? கண்ணுக்கு லட்சணமாய் ஒருவன் வந்திருக்கிறானே, அவனைச் சொல்கிறாயா?"

"ஆமாம், அப்பா!" என்றாள் சத்தியா பின்புறம் திரும்பி நின்று கொண்டு.

"அவன் விதேக நாட்டு அரசகுமாரன்—என்ன விசேஷம்?"

"ஒன்றும் இல்லை. வெறுமனே தெரிந்து கொள்ளத்தான் கேட்டேன்."

"அவனை இலேசுப் பட்டவன் என்று எண்ணி விடாதே. வில் வித்தை, வாள் வித்தை அவ்வளவையும் கற்றுக்கொண்டு என்னிடம் சாஸ்திரம் கற்க வந்திருக்கிறான். இவ்வளவுக்கும் அவன் வயதில் மிகச் சிறியவன். உன்னைவிட இரண்டு வயது பெரியவன்."

இவ் விவரத்தைத் தான் கேட்காமலேயே அவர் கூறியது சத்தியாவுக்கு மிகவும் இதமாக இருந்தது. முதன் முதலாக அவனைக்




"சத்தியா!"

"என்ன?"

"உங்க அப்பா உன்னைக் கூப்பிடுவது கேட்கவில்லையா?"

சத்தியா மான் குட்டியைப் போலத் துள்ளிக் குதித்துக் கொண்டே ஓடினாள்.

"வெகு நேரமாகக் கூப்பிட்டுக் கொண்டிருக்கிறேனே, நீ என்னம்மா பண்ணிக் கொண்டிருந்தாய்?" என்று கேட்டார் அவள் தந்தை.

"நான் என் சகிகளோடு ரோஜாச் செடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்தேன்" என்றாள் சத்தியா.

"உன்னோடு ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றிப் பேச வேண்டியிருக்கிறது" என்று கேட்டார் வைசம்பாயனர்.

"என்ன விஷயம் அப்பா?" என்று கேட்டாள் சத்தியா.

வைசம்பாயனர் அவளை அழைத்துக் கொண்டு போய்ப் பக்கத்தில் இருந்த பூவரச மரத்தினடியில் உட்கார்ந்தார்.

"நான் இப்போது சொல்லும் விஷயம் மிகவும் முக்கியமானது. நீ கவனமாய்க் கேட்க வேண்டும்."

"சரி!"

"ஆசிரமத்திற்கு ஒரு அதிதி வந்திருக்கிறார். அவர் மத்ச்ய தேசத்தின் மந்திரி. மத்ச்யராஜன் அனுப்பியிருக்கிறான்.— உன் விஷயமாய்த்தான்."

"என் விஷயமாகவா? இது என்ன மிகவும் அதிசயமாக இருக்கிறது!"

"என்னிடம் இரண்டு வருஷமாகப் பார்த்தன் என்று ஒரு மாணவன் தர்க்கம் படித்துக் கொண்டிருக்கிறானே, தெரியுமா?"

"அவன் கூட மத்ச்ய தேசத்து அரச குமாரன் போலிருக்கிறதே!"

"ஆமாம், அவனுடைய படிப்பு விரைவில் முடிந்து விடும். இன்னும் அதிகமாய்ப் போனால் ஓரிரண்டு மாதங்கள்தான் இங்கு இருப்பான். மத்ச்ய ராஜன் தன் குமாரனை ராஜ்யத்திற்கு அழைத்துக் கொள்ளும் போது, அவனோடு உன்னையும் மாற்றுப் பெண்ணாக அடைய வேண்டும் என்று ஆசைப்படுவனாகத் தன் மந்திரியிடம் கூறியனுப்பியிருக்கிறான். இது பற்றி உன் மனதை அறியத்தான் நான் உன்னைக் கூப்பிட்டேன். பார்த்தனை விவாகம் செய்து கொள்ள உனக்கு இஷ்டம் தானா?"

"எனக்கு யாரை மணந்து கொள்ளவும் இஷ்டம் இல்லை. பார்த்தனானாலும் சரி, பார்த்தனுக்குத் தேர் ஓட்டிய பார்த்த சாரதியானாலும் சரி—எனக்குக் கல்யாணம் செய்து கொள்ளவே இஷ்டம் இல்லை, அப்பா!"

"கடைசி வரை என்னோடு கானகத்தில் கன்னியாகவே வாழப் போகிறாயா?"

"ஆமாம், அப்பா! உங்களோடு என்றும் கூடவே இருக்கப் போகிறேன்."

"வந்தவருக்கு இப்போது என்ன பதில் சொல்லி யனுப்புவது?"

"எனக்குக் கல்யாணம் செய்து கொள்ளக் கொஞ்சங்கூட இஷ்டமில்லை, அப்பா!"

"உனக்கு இஷ்டமில்லை யென்று சொல்லி, வந்த அதிதியை அனுப்பிவிடச் சொல்கிறாயா? அது அவ்வளவு நன்றாய் இராது. மரியாதையாகவும் இராது. இரண்டு மூன்று மாதங்களுக்கு முன் இப்படித்தான் அவந்தி ராஜன் தன் குமாரனுக்கு உன்னை

அப்போது ஒரு அதிசயமான விஷயத்தை நான் கவனித்தேன்.

மேற்குத் திசையில் சந்திரன் வெகு தூரம் கீழே இறங்கியிருந்தான். அஸ்தமன சந்திரனின் நிலவொளியில் குன்றுகளின் சிகரங்களும், மொட்டைப் பாறைகளும் கரிய நிழல் திரள்களைக் கிழக்கு நோக்கி வீசியிருந்தன. சிற்ப வடிவங்களின் நிழல்கள் பிரம்மாண்ட ராட்சத வடிவங்களாகக் காட்சி தந்தன. நெடி துயர்ந்த மரங்களின் நிழல்கள் பன்மடங்கு நீண்டு கடலோரம் வரையில் சென்றிருந்தன. என்னுடைய நிழல்கூட அந்த வெள்ளிய பாறையில் இருள் வடிவமாகக் காணப்பட்டது.

ஆனால்,...... ஆனால்,...... அந்த அதிசயக் காதலர்கள் என் முன்னாலே, கண்ணெதிரே நின்றார்களாயினும், அவர்களுடைய நிழல்கள் பாறையில் விழுந்திருக்கக் காணவில்லை.

இதைக் கவனித்ததனால் ஏற்பட்ட பிரமிப்புடன் அந்தத் தம்பதிகளை மீண்டும் ஒரு முறை பார்த்தேன். விந்தை! விந்தை!, அவர்களையும் காணவில்லை!

அந்த அழகிய தம்பதிகள் இருந்த இடம் வெறுமையாய், சூனியமாய், வெறிச்சென்று இருந்தது.

திடீரென்று நிலவொளி மங்கியது. சுற்றிலும் இருள் சூழ்ந்து வந்தது. என் கண்களும் இருண்டன. தலை சுற்றியது. நினைவிழந்து கீழே விழுந்தேன்.

• • •

மறு நாள் உதய சூரியனின் கிரணங்கள் என் முகத்திலே பட்டு என்னைத் துயிலெழுப்பின. திடுக்கிட்டு விழித்தெழுந்தேன். நாலாபுறமும் பார்த்தேன். முதல் நாளிரவு அநுபவங்கள் எல்லாம் நினைவு வந்தன. அவையெல்லாம் கனவில் கண்டவையா, உண்மையில் நிகழ்ந்தவையா என்று விளங்கவில்லை. அந்தப் பிரச்னையைப் பற்றி யோசிக்கவும் நேரம் இல்லை. ஏனெனில், நீலக் கடல் ஓடையின் நடுவே நின்ற கப்பல் அதன் பயங்கரமான ஊது குழாய்ச் சத்தத்தைக் கிளப்பிக் கொண்டிருந்தது. படகு ஒன்று இந்தக் கரையோரமாக வந்து நின்று கொண்டிருந்தது. அந்தப் படகு மறுபடியும் என்னை ஏற்றிக் கொள்ளாமல் போய்விடப் போகிறதே என்ற பயத்தினால் ஒரு பெரும் ஊளைச் சத்தத்தைக் கிளப்பிக் கொண்டு நான் அந்தப் படகை நோக்கி விரைந்தோடினேன். நல்ல வேளையாகப் படகைப் பிடித்துக் கப்பலையும் பிடித்து ஏறி இந்தியா தேசம் வந்து சேர்ந்தேன்.

## பின்னுரை

ஸினிமாவை முழுதும் பார்க்க முடியாமல் என்னை அழைத்துக் கொண்டு வந்த நண்பர் இவ்விதம் கதையை முடித்தார். அந்த விசித்திரமான கதையைக் குறித்துக் கடல் அலைகள் முணு முணுப்பு பாஷையில் விமரிசனம் செய்தன.

கடற்கரையில் மனித சஞ்சாரமே கிடையாது. கடற்கரைச் சாலையில் நாங்கள் வந்த வண்டிமட்டுந்தான் நின்றது.

"இன்னமும் எழுந்திருக்க மாட்டீர் போலிருக்கிறதே! கதை முடிந்துவிட்டது; போகலாம்!" என்றார் நண்பர்.

"உங்களுடைய மோகினித் தீவை எனக்கும் பார்க்கவேண்டும் என்று ஆசையாயிருக்கிறது. ஒரு தடவை என்னையும் அழைத்துக் கொண்டு போகிறீர்களா?" என்று கேட்டேன்.

"பேஷாக அழைத்துக் கொண்டு போகிறேன். ஆனால் என்னுடைய கதையை நீர் நம்புகிறீரா? கேட்டவர்களில் அநேகம் பேர் நம்பவில்லை!"

"நம்பாதவர்கள் கிடக்கிறார்கள். அவர்கள் கொடுத்து வைத்தது அவ்வளவுதான். நான் நிச்சயமாய் நம்புகிறேன்" என்றேன்.

சிறிது யோசித்துப் பார்த்தால், அந்த நண்பருடைய கதையில் அவநம்பிக்கை கொள்ளக் காரணம் இல்லை தானே? வெளி உலகில் நடைபெறும் நிகழ்ச்சிகள் மட்டுமே உண்மையானவை என்று நாம் எதற்காகக் கருதவேண்டும்? கவிஞன் ஒருவனுடைய கற்பனை உள்ளத்தில் நிகழும் அற்புத சம்பவங்களை உண்மையல்லவென்று ஏன் கொள்ள வேண்டும்?



வந்தது. இன்றைக்கும் தமிழ் நாட்டில் வழங்கும் பழமொழியைச் சொல்லி என்னைப் பரிகசித்தது சோழ இளவரசன் சுகுமாரன்தான் என்பதை அறிந்துத் தெரிந்து கொண்டேன். அதை வெளியிட்டுக் கூறினேன்.

"தாங்கள்தான் சுகுமார சோழர் என்று தோன்றுகிறது. உண்மை தானே? அப்படியானால், இந்தப் பெண்மணி......?" என்று சொல்லி, உயிர் பெற்ற அழகிய சிற்பவடிவம் போலத் தோன்றிய அந்த மங்கையின் முகத்தை நோக்கினேன்.

அவள் மூன்று உலகங்களும் பெறக் கூடிய ஒரு புன்னகை புரிந்தாள். அந்தப் புன்னகையுடனே என்னைப் பார்த்து, "ஏன், ஐயா! என்னைப் பார்த்தால் பாண்டிய ராஜகுமாரியாகத் தோன்றவில்லையா?" என்றாள்.

நான் உடனே விரைந்து, "அம்மணி! தங்களைப் பார்த்தால் பாண்டிய ராஜகுமாரியாகத் தோன்றவில்லை தான்! மூன்று உலகங்களையும் ஒரு குடையின் கீழ் ஆளக்கூடிய சக்கரவர்த்தியின் திருக் குமாரியாகவே தோன்றுகிறீர்கள்!" என்றேன்.

அப்போது அந்தச் சுந்தரி தன் நாயகனைப் பார்த்து, "கேட்டீர்களா? முன்னைக்கு இப்போது தமிழ்நாட்டு ஆடவர்கள் புகழ்ச்சி கூறுவதில் அதிக முன்னேற்றம் அடைந்திருப்பதாகத் தோன்றவில்லை. தாங்கள் அந்நாளில் என்னைப் பார்த்து, 'ஈரேழு பதினாலு புவனங்களுக்கும் சக்கரவர்த்தினியாயிருக்க வேண்டியவளை இந்தச் சின்னஞ் சிறு தீவின் அரசியாக்கி விட்டேனே' என்று சொன்னது ஞாபகமிருக்கிறதா?" என்றாள்.

அதைக் கேட்ட சுகுமார சோழர் சிரித்தார். அதுவரையில் மலைப் பாறையிலே உட்கார்ந்திருந்த அந்தத் தம்பதிகள் அப்போது எழுந்தார்கள். ஒருவர் தோளை ஒருவர் தழுவிய வண்ணமாக இருவரும் நின்றார்கள்.

சாம்ராஜ்யத்தை இதோ பாருங்கள்! ஒரு தடவை நன்றாய்ப் பார்த்து விட்டு மறுமொழி சொல்லுங்கள்!"

இவ்விதம் கூறி அந்த மோகினித் தீவின் சுந்தரி தீவின் உட்புறத்தை நோக்கித் தன் அழகிய கரத்தை நீட்டி விரல்களை அசைத்துச் சுட்டிக் காட்டினாள். அவள் சுட்டிக் காட்டிய திசையில் பார்த்தேன். மாடமாளிகைகளும் கூட கோபுரங்களும் மணி மண்டபங்களும் அழகிய விமானங்களும் விஹாரங்களும் வரிசை வரிசையாகத் தென்பட்டன. பால் போன்ற வெண்ணிலவில் அக் கட்டிடங்கள் எல்லாம் அப்போதுதான் கட்டி முடிக்கப்பட்ட புத்தம் புதிய கட்டிடங்களாகத் தோன்றின. தந்தத்தினாலும் பளிங்கினாலும் பல வர்ணச் சலவைக் கற்களினாலும் கட்டப்பட்டவை போல ஜொலித்தன. பாறை முகப்புகளில் செதுக்கப் பட்டிருந்த சிற்ப உருவங்களெல்லாம் உயிர்க் களைபெற்று விளங்கின. சிறிது நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தால் அந்த வடிவங்கள் உண்மையாகவே உயிர் அடைந்து பாறை முகங்களிலிருந்து வெளிக் கிளம்பி என்னை நோக்கி நடந்து வரத் தொடங்கி விடும்போலக் காணப்பட்டன. கடைசியாகத் தோன்றிய இந்த எண்ணம் எனக்கு ஒரு விதப் பயத்தை உண்டாக்கியது. கண்களை அந்தப் பக்கமிருந்து திருப்பி, கதை சொல்லிவந்த அதிசய தம்பதிகளை நோக்கினேன். திடீரென்று பனி பெய்ய ஆரம்பித்து அவர்களை இலேசான பனிப்படலம் மூடியிருந்தது. பனியினால் என் உடம்பும் சில்லிட்டது.



அவர்களை உற்றுப் பார்த்த வண்ணம் தழ தழுத்த குரலில், "கதை நன்றாகத்தான் இருந்தது. ஆனால் நான் ஆரம்பத்தில் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லவில்லையே? நீங்கள் யார்? இந்தத் தீவுக்கு எப்போது எப்படி வந்தீர்கள்?" என்றேன்.

இருவருடைய குரலும் இனிய சிரிப்பின் ஒலியில் கலந்து தொனித்தன.

"விடிய விடியக் கதை கேட்டு விட்டுச் சீதைக்கு இராமர் என்ன உறவு என்று கேட்டது போலிருக்கிறதே?" என்றான் அந்தச் சுந்தர புருஷன்.

தமிழ் மொழியில் மற்ற பாஷைகளுக்கு இல்லாத ஒரு விசேஷம் உண்டு என்று அறிஞர்கள் சொல்லி நான் கேள்விப்பட்டிருந்தேன். அதாவது ஆயிரக் கணக்கான வருஷங்களாகத் தமிழ் மொழி ஏறக்குறைய ஒரே விதமாகப் பேசப்பட்டு வந்திருக்கிறது என்பது தான். இது எனக்கு நினைவு

எண்ணினார்கள். உத்தம சோழரும் புதல்வனுக்கு மனம் உவந்து விடை கொடுத்தார். ஆனால் இறுதிவரை புவன மோகினி விஷயத்தில் மட்டும் அவர் கல்நெஞ்சராகவே இருந்தார். அந்தப் பெண்ணின் உதவியால் தாம் மதுரை நகர்ச் சிறையிலிருந்து வெளி வர நேர்ந்த அவமானத்தை அவரால் மறக்கவே முடியவில்லை......''

இப்போது மறுபடியும் அந் நங்கை குறுக்கிட்டுக் கதையைப் பிடுங்கிக் கொண்டு கூறினாள் :—

"ஆனாலும் புவனமோகினி புறப் படும்போது உத்தமசோழரிடம் போய் நமஸ்கரித்து விடை பெற்றுக் கொண்டாள். தன்னால் அவருக்கு நேர்ந்த கஷ்டங்களை யெல்லாம் மறந்து தன்னை மன்னிக்க வேண்டும் என்று மன்றாடினாள். அந்தக் கிழவரும் சிறிது மனங் கனிந்துதான் விட்டார். 'பெண்ணே! இப்படியெல்லாம் நடக்கும் என்று தெரிந்திருந்தால் நான் ஆரம்பத்திலேயே உன் கலியாணத் துக்கு ஆட்சேபம் சொல்லி யிருக்க மாட்டேன். குலத்தைப்பற்றி விளை யாட்டாக ஏதோ நான் சொல்லப் போக, என்னவெல்லாமோ விபரீதங் கள் நிகழ்ந்து விட்டன. போனது போகட்டும். எப்படியாவது என் மகனும் நீயும் ஆனந்தமாக வாழ்க்கை நடத்தினால் சரி' என்றார். 'தங்கள் வாக்குப் பலிக்கும்' என்று புவன மோகினி சொன்னாள். அப்படியே உத்தமசோழரின் வாக்குப் பலித்து விட்டது. இல்லையா? நீங்களே சொல்லுங்கள்!" என்று சொல்லி அந்தச் சுந்தர வனிதை தன் நாயகன் முகத்தை ஆர்வத்துடன் பார்த்தாள்.

தம்பதிகள் இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துப் புன்னகை புரிந்தவண்ணம் இருந்தார்கள். நேர உணர்ச்சியே யின்றி அப்படியே அவர்கள் இருந்து விடுவார்கள் என்று தோன்றிற்று. நானும் காதலர்கள் பலரைப் பார்த்திருக்கிறேன்; கதை களிலும் படித்திருக்கிறேன். ஆனால் இந்தத் தம்பதிகளின் காதல் மிக அபூர்வமானதாக எனக்குத் தோன்றி யது. அப்படி ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டே இருப்பதற்கு என்னதான் இருக்கும்? என்னதான் வசீகரம் இருந்தாலும், என்னதான் மனதில் அன்பு இருந்தாலும், இப்படி அலுக்காமல் சலிக்காமல் பார்த்துக் கொண்டிருப்பதென்றால் அது விந்தை யான விஷயந்தான் அல்லவா?

ஆனால் நான் பொறுமை இழந்து விட்டேன்; அவர்களிடம் பொறுமை யும் கொண்டேன் என்றால் அது உண்மையாகவே இருக்கும். கதையின் முடிவைத் தெரிந்து கொள்ளும் ஆவ லும் அதிகமா யிருந்தது.

"என்ன? திடீரென்று இருவரும் மௌனம் சாதித்து விட்டீர்களே? பிற்பாடு என்ன நடந்தது? கதையை முடியுங்கள்!" என்றேன்.

"அப்புறம் என்ன? ஆயிரம் வருஷ மாக, கரிகால் சோழன் காலத்தி லிருந்து பரம்பரைப் பெருமையுடன் வந்திருந்த சோழ சாம்ராஜ்யத்தைத் துறந்து சுகுமாரன் நாகப்பட்டினம் துறைமுகத்தில் கப்பல் ஏறினான். கடலில் சிறிது தூரம் கப்பல்கள் சென்றதும், மூன்று கப்பல்களிலும் இருந்த வேல், வாள் முதலிய ஆயுதங் களை யெல்லாம் எடுத்து நடுக்கடலில் போடும்படி செய்தான். கல்லுளி களையும் சுத்திகளையும் தவிர வேறு ஆயுதமே கப்பலில் இல்லாமல் செய்து விட்டான். பிறகு பல தேசங்களுக்குச் சென்று பல இடங்களைப் பார்த்து விட்டுக் கடைசியாக இந்த ஜன சஞ்சாரமில்லாத தீவுக்கு வந்து இறங் கினோம். எல்லாம் இந்தப் பெண்ணாய்ப் பிறந்தவளின் பிடிவாதம் காரண மாகத்தான்!" என்று ஆடவன் சொல்லி நிறுத்தினான்.

கடைசியில் அவன் கூறியது எனக்கு அளவிலாத திகைப்பை அளித்தது. இத்தனை நேரமும் சுகுமாரன்-புவன மோகினியைப் பற்றிப் பேசி வந்தவன் இப்போது திடீரென்று, 'வந்து இறங் கினோம்' என்று சொல்லுகிறானே? இவன்தான் ஏதாவது தவறாகப் பிதற்றுகிறானா அல்லது என் காதிலே தான் பிசகாக விழுந்ததோ என்று சந்தேகப்பட்டு அந்தப் பெண்ணின் முகத்தைப் பார்த்தேன். அவள் கூறி னாள் :—"நீங்களே சொல்லுங்கள், ஐயா! அந்த உளுத்துப்போன பழைய சோழ ராஜ்யத்தைக் கைவிட்டு வந்த தினால் இவருக்கு நஷ்டம் ரொம்ப நேர்ந்து விட்டதா? நாங்கள் இந்தத் தீவுக்கு வந்து ஸ்தாபித்த புதிய சாம்

தைரியமும் பிறந்து விட்டது. ஆகையினால் மறைவிடத்திலிருந்து அவன் முன்னால் வந்தான். 'கண்மணி! என்னைப் பார்த்து இந்தக் கேள்விக்கு மறுமொழி சொல்லு! நான் ராஜகுமாரனாயில்லாமல் ஏழைச் சிற்பியாக மாறி விட்டால் நான் உனக்குச் செய்த வஞ்சனையை மன்னித்து விடுவாயா? என்னை மணந்து கொள்ளவும் சம்மதிப்பாயா?' என்றான். பாண்டிய குமாரி உடனே மறுமொழி சொல்லவில்லை. மறுமொழி சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. அவள் முகமும் கண்களும் அவள் மனதிலிருந்ததை வெளியிட்டன. சற்றுப் பொறுத்து அவள், 'நடக்காத காரியத்தை ஏன் சொல்லுகிறீர்கள்? ஏன் வீணாசை காட்டுகிறீர்கள்? போரிலே முழுத் தோல்வியடைந்து அடிமையாகிச் சிறைப்பட்டிருக்கும் ஒரு பெண்ணுக்காக யார் பரம்பரையாக வந்த அரசைக் கைவிடுவார்கள்? சோழ ராஜ்யத்தோடு இப்போது பாண்டிய ராஜ்யமும் சேர்ந்திருக்கிறதே? விடுவதற்கு மனம் வருமா?' என்றாள். 'என் கண்மணி! உனக்காக ஏழு உலகம் ஆளும் பதவியையும் நான் தியாகம் செய்வேன். ஆனால் உனக்கு ராணியாக இருக்க வேண்டும் என்கிற ஆசை இல்லையே?' என்று சுகுமாரன் கேட்டான். 'ராணியாக வேண்டும் என்ற ஆசையிருந்தால் தேவேந்திரச் சிற்பியின் சீடனுக்கு என் இருதயத்தைக் கொடுத்திருப்பேனா?' என்றாள் பாண்டிய குமாரி. உடனே சுகுமாரன் தன் அரையில் செருகியிருந்த உடைவாளை எடுத்துக் காட்டி, 'இதோ இந்தக் கொலைக் கருவியை, ராஜகுல சின்னத்தை, பயங்கர யுத்தங்களின் அடையாளத்தை, உன் கண்முன்னால் முறித்து எறிகிறேன், பார்!' என்று சொல்லி அதைத் தன்னுடைய பலம் முழுவதையும் பிரயோகித்து முறித்தான். உடைவாள் படீரென்று முறிந்து தரையிலே விழுந்தது!

பின்னர் சுகுமாரன் தன் தந்தையிடம் சென்றான். அரசாட்சியில் தனக்கு விருப்பம் இல்லையென்றும், ராஜ்யத்தைத் தன் சகோதரன் ஆதித்யனுக்குக் கொடுத்து விடுவதாகவும், ராஜ்யத்துக்கு ஈடாகப் புவனமோகினியைத் தனக்குத் தரவேண்டும் என்றும் கேட்டுக் கொண்டான். முதலில் அதற்கு உத்தம சோழர் இணங்கவில்லை. எவ்வளவோ விதமாகத் தடை சொல்லிப் பார்த்தார். சுகுமாரன் ஒரே உறுதியாக இருந்தான். 'அப்பா! தாங்கள் நீண்ட பரம்பரையில் வந்த சோழநாட்டுச் சிம்மாசனத்தில் பராக்கிரம பாண்டியன் மகள் ஏறச் சம்மதிக்க முடியாது என்றுதானே சொன்னீர்கள்? உங்களுடைய அந்த விருப்பத்துக்கு நான் விரோதம் செய்யவில்லை. வேறு என்ன உங்களுக்கு ஆட்சேபம்? இந்த தேசத்திலேயே நாங்கள் இருக்கவில்லை. கப்பலேறிக் கடல் கடந்து போய்விடுகிறோம்! தங்களைப் பாண்டியனுடைய சிறையிலிருந்து மீட்டு வந்ததற்காக எனக்கு இந்த வரம் கொடுங்கள்!' என்று கெஞ்சினான். அவனுடைய மன உறுதி மாறாது என்று தெரிந்து கொண்டு உத்தம சோழர் கடைசியில் சம்மதம் கொடுத்தார். 'ஒரு விதத்தில் உன் முடிவும் நல்லதுதான், மகனே! சோழ குலத்தில் நம் முன்னோர்கள் கப்பலேறிக் கடல் கடந்து போய் அயல் நாடுகளில் எல்லாம் நம்முடைய புலிக் கொடியை நாட்டினார்கள். சோழ சாம்ராஜ்யம் வெகு தூரம் பரந்திருந்திருந்தது. அந்தப் பரம்பரையை அனுசரித்து நீயும் காரியம் செய்தால் அதைப் பாராட்ட வேண்டியதுதானே? மூன்று கப்பல் நிறைய ஆயுதங்களையும் போர் வீரர்களையும் அழைத்துக் கொண்டு போ! இன்னும் பிரயாணத்துக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் சேகரித்துக் கொள்!' என்றார். சுகுமாரன் அவ்விதமே பிரயாண ஆயத்தங்கள் செய்தான். போருக்குரிய ஆயுதங்களோடுகூட சிற்பவேலைக்கு வேண்டிய கல்லுளிகள், சுத்திகள் முதலியவற்றையும் ஏராளமாகச் சேகரித்துக் கொண்டான். வீரர்களைக் காட்டிலும் அதிகமாகவே சிற்பக் கலை வல்லுனர்களையும் திரட்டினான். தேவேந்திரச் சிற்பியாரையும் மிகவும் வேண்டிக்கொண்டு தங்களுடன் புறப்படுவதற்கு இணங்கச் செய்தான். தேசத்திலே பிரஜைகள் எல்லாரும் இளவரசர் வெளிநாடுகளில் யுத்தம் செய்து வெற்றி மாலை சூடுவதற்காகப் புறப்படுகிறார் என்று

இவ்விதம் கூறியவுடனே சுகுமாரனுடைய குரலைக் கேட்டுத் திடுக்கிட்டான். 'தாதி! அந்த வஞ்சக ராஜகுமாரனைப் பாண்டிய குமாரி ஒரு சமயம் காதலித்தாள். அந்தக் காதலின் மேல் ஆணையாக அவனைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்வதாகச் சொல்லு! முத்திரை மோதிரத்தை உபயோகித்துத் தப்பித்துக் கொண்டு போகச் சொல்லு. இச் சமயம் தப்பித்துக்கொண்டு போனால் பிறிதொரு சமயம் நல்லகாலம் பிறக்கலாம்; இருவருடைய மனோரதமும் நிறைவேறக் கூடும் என்று சொல்லு!' என்பதாக அந்தக் குரல் கூறியது. அந்தக் குரல் புவன மோகினியின் மனதை உருகச் செய்தது. அவளுடைய உறுதி குலையச் செய்தது. தேவேந்திர சிற்பியின் சிற்ப மண்டபத்தில் கேட்ட குரல் அல்லவா அது? பழைய நினைவுகள் எல்லாம் குமுறிக்கொண்டு வந்தன. தழ தழத்த குரலில் பாண்டிய குமாரி கூறினாள்:—'தாதி! நான் இந்த வஞ்சக ராஜகுமாரனை என்றைக்கும் காதலித்ததில்லை என்று சொல்லு! சோழ நாட்டிலிருந்து தேவேந்திர சிற்பியிடம் சிற்பக் கலை கற்றுக் கொள்ள வந்த ஏழைச் சிற்பியையே நான் காதலித்தேன் என்று சொல்லு!' என்றாள். அடுத்த கணத்தில் சோழ ராஜகுமாரன் புவனமோகினியின் எதிரில் வந்து நின்றான். அவன் கூறிய விஷயம் பாண்டிய குமாரியைத் திகைக்கும்படி செய்துவிட்டது......"

அந்த மங்கையின் நாயகன் இப்போது கூறினான்:—"பாண்டிய குமாரி தான் சோழ ராஜகுமாரனைக் காதலிக்கவில்லையென்றும் இளஞ் சிற்பியையே காதலித்ததாகவும் கூறிய தட்சணமே சுகுமாரனுடைய மனதில் தான் செய்ய வேண்டியது என்ன என்பது உதித்துவிட்டது. அது வரையில் புவன மோகினியை நேருக்கு நேர் பார்க்க வெட்கப் பட்டுக் கொண்டிருந்தவனுக்கு இப்போது அவளைப் பார்க்கும்



# மோகினித் தீவு



[பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவின் அறுபதாம் ஆண்டு பூர்த்தி விழாவை முன்னிட்டு, "நேரு அபிநந்தன் கிரந்த்" என்னும் ஞாபகார்த்த வாழ்த்து நூல் ஒன்று ஆங்கிலத்திலும் ஹிந்தியிலும் வெளியிடப்படுகிறது. இந்த நூலை ஜனவரி 28உ பாபு ராஜேந்திர பிரஸாத் ஜவாஹர்லாலிடம் சமர்ப்பிப்பார் என்ற செய்தியை நேயர்கள் தினப் பத்திரிகைகளில் படித்திருப்பார்கள். "நேரு அபிநந்தன்" புத்தகத்தில் பண்டித நேருவைப் பற்றிய புகழ்மாலைகளைத் தவிர, இந்தியாவின் வெவ்வேறு மாகாண பாஷைகளின் நூலாசிரியர்கள் எழுதிய கதைகள்—கட்டுரைகளும் வெளியிடப்படுகின்றன. மேற்படி புத்தகத்தின் பதிப்புக் கமிட்டியார் கேட்டுக் கொண்டதன் பேரில் "கல்கி" ஆசிரியர் தமிழ் நாட்டின் புராதன பண்பாட்டை விளக்கும் முறையில் எழுதியது "மோகினித் தீவு" என்னும் கதை. இதன் ஆங்கில-ஹிந்தி மொழி பெயர்ப்புக்கள் "நேரு அபிநந்தன்" புத்தகத்தில் வெளியாகலாம்.]

## ✤ பத்தாம் அத்தியாயம் ✤

மோகினித் தீவில் பூரணச் சந்திரனின் போதை தரும் வெண்ணிலவில் குன்றின் உச்சியில் உட்கார்ந்து அத் தம்பதிகள் எனக்கு அந்த விசித்திரமான கதையைச் சொல்லி வந்தார்கள். ஒருவரோடொருவர் மோதி அடித்துக் கொண்டு சொன்னார்கள். குழந்தைகள் எங்கேயாவது போய் விட்டு வந்தால், "நான் சொல்கிறேன்" "நான் சொல்லுகிறேன்" என்று போட்டியிட்டுக்கொண்டு சொல்லும் அல்லவா? அந்த ரீதியில் சொன்னார்கள்.

அழகே வடிவமான அந்த மங்கை கூறினாள்: "பாண்டிய குமாரி சிறை



யில் தன்னந் தனியாக இருந்த போது அவளுக்குச் சிந்தனை செய்யச் சாவகாசம் கிடைத்தது. இராஜரீக விவகாரங்களும் அவற்றிலிருந்து எழும் போர்களும் எவ்வளவு தீமைகளுக்குக் காரணமாகின்றன என்பதை உணர்ந்தாள். தன்னுடைய கலியாணப் பேச்சுக் காரணமாக எழுந்த விபரீதங்களை ஒவ்வொன்றாக எண்ணிப் பார்த்து வருத்தப்பட்டாள். தான் ராஜகுமாரியாகப் பிறந்திராமல் சாதாரணக் குடும்பத்தில் பெண்ணாகப் பிறந்திருந்தால் இவ்வளவு துன்பங்களும் உயிர்ச்சேதங்களும் ஏற்பட்டிராதல்லவா என்று எண்ணி ஏங்கினாள். தன் காரணமாக எத்தனையோ பேர் உயிர் துறந்திருக்கத் தான் மட்டும் யுத்தகளத்தில் உயிர்விட எவ்வளவோ முயன்றும் முடியாமற் போன விதியை நொந்து கொண்டாள். இப்படிப்பட்ட நிலைமையிலேதான் தாதி வந்து சோழ குமாரன் கொடுத்த முத்திரை மோதிரத்தைக் கொடுத்தாள். புவனமோகினிக்கு உடனே சுகுமாரன் செய்த வஞ்சனை நினைவுக்கு வந்து அளவில்லா ஆத்திரத்தை மூட்டியது. அந்த ஆத்திரத்தைத் தாதியிடம் காட்டினாள். 'இந்த மோதிரத்தைக் கொடுத்தவரிடமே திருப்பிக் கொண்டு போய்க் கொடுத்து விடு! அவரைப் போன்ற வஞ்சகம் மிக்க ராஜகுமாரரின் உதவி பெற்றுக்கொண்டு உயிர் தப்பிப் பிழைக்க விரும்பவில்லை என்று சொல்லு! அதைக் காட்டிலும் இந்தச் சிறையிலேயே இருந்து உயிரை விடுவேன் என்று சொல்லு! அந்த மனிதர் முத்திரை மோதிரத்தை ஒரு காரியத்துக்காக வாங்கிக் கொண்டு அதைத் துர் உபயோகப்படுத்தி மோசம் செய்து விட்டு ஓடிப் போனார். அது சோழ குலத்தின் பராக்கிரமமாயிருக்கலாம். ஆனால் பாண்டிய குலப் பெண் அப்படிச் செய்ய மாட்டாள் என்று சொல்லு! வஞ்சனைக்கும் பாண்டிய குலத்தினருக்கும் வெகு தூரம்!' என்று சொன்னாள்.

இரும்பு தளவாட சாமான்களுக்கு இந்திய நாடெங்கும் பிரபல்யமுள்ள

# நோபில் ஸ்டீல் ப்ராடக்ட்ஸ்

லிமிடெட் :: :: பம்பாய்



காலமோ கெட்டுக் கிடக்கிறது. தீ விபத்தி
லிருந்தும் திருட்டு பயத்திலிருந்தும் பாது
காப்பு வேண்டும். குறைந்த செலவில்
நிரந்தரமாக இவைகளைத் தருவது
பம்பாய் நோபில் ப்ராடக்ட்ஸ் கம்பெனியார்
தயார் செய்யும் உறுதியே உருக்கொண்ட
இரும்புப் பெட்டிகள், பணப் பெட்டிகள்,
பித்தளைப் பூட்டுகள், மற்றும் பாங்குகளுக்
கும், கடைகளுக்கும், வீடுகளுக்கும்
வேண்டிய ஸேப் டிபாஸிட் லாக்கர்கள்—
இவை யாவும் உங்களுக்குத் தேவையான
சைஸ்களில் கிடைக்கும். பாரத நாட்டில்
பதினாயிரக் கணக்கானவர்கள் இவைகளை
வாங்கி மன நிம்மதியுடன் இருக்கிறார்கள்.
தினம் தினம் புதிய புதிய வாடிக்கைக்
காரர்கள் இவைகளை வாங்கி வருகிறார்கள்.
உங்களுக்கும் நோபில் ஸ்டீல் பண்டங்கள்
வேண்டிய பாதுகாப்பை அளிக்கட்டும்.
விவரமான காட்டலாகிற்கு எழுதுங்கள்.





தமிழ் நாடக உலகில் தனிச்சுடர் மணிகளாக விளங்கும் ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்கள், 'அபூர்வ சகோதரர்'கள் அல்ல; ஒருவருக்கொருவர் தோற்றத்தில் வித்தியாசப் பட்டவர்கள்தான். ஆயினும் ஸ்ரீ டி. கே. ஷண்முகம் யார், ஸ்ரீ டி. கே. பகவதி யார் என்னும் சந்தேகம் பலருக்கும் பல சமயங்களில் ஏற்படுவதுண்டு. அந்தச் சந்தேகத்தை அறவே நீக்கும் பொருட்டு, மேலே உள்ளவர்களில் மூக்குக் கண்ணாடி அணிந்தவர் ஸ்ரீ டி. கே. ஷண்முகம், மற்றவர் ஸ்ரீ டி. கே. பகவதி என்பதைத் தெளிவாக அறிவிக்க விரும்புகிறோம். இந்த அருமைச் சகோதரர்கள் மூக்குக் கண்ணாடியை மாற்றிப் போட்டுக்கொண்டு நம்மைத் திண்டாட்டத்தில் விடமாட்டார்கள் என்று நம்புகிறோம்.

ஸ்ரீ டி.கே.எஸ். சகோதரர்கள் நடத்தும் சிறந்த நாடகங்களில் ஒன்றான 'மனோகரன்' என்னும் நாடகத்தை நாளது ஜனவரி 11-ந் தேதி யன்று சென்னை ஒற்றைவாடைத் தியேட்டரில் மகாத்மா காந்தி ஞாபகார்த்த ஸ்தூபி நிதிக்காக நடத்துகிறார்கள். மேன்மை தங்கிய கவர்னர் பவநகர் மகாராஜா அவர்கள் அந்த நாடகத்துக்குத் தலைமை வகிக்கிறார்கள். அன்றைய தினம் நாடகம் பார்க்கிறவர்கள் ஒரு அருமையான நாடகத்தைப் பார்த்துக் களிப்பதோடு தாங்கள் கொடுத்த தொகை காந்திமகானின் ஸ்தூபிக்காகத் திரட்டிவரும் புனிதநிதிக்குப் போய்ச் சேருகிறது என்று திருப்தியும் அடையலாம்.

---

வருஷத்திலிருந்து தஞ்சை நாதஸ்வர வித்துவான் ஏ. கே. ராஜு நாயுடு சின்னக் கோஷ்டியில் நாதஸ்வரம் வாசிக்க முன் வந்து வாசித்து வந்தார்.

1937-ம் வருஷத்தில் பங்களூர் நாகரத்தினம்மாள் மூன்றாவது உற்சவம் ஒன்றை நடத்த ஆரம்பித்தார். இதற்கும் ஒரு காரணம் உண்டு. அதிஷ்டான சந்நிதானத்தில் கச்சேரி செய்ய ஆசை கொண்ட அவர் பக்க வாத்தியங்கள் வேண்டுமென்று பெரிய கட்சியாரிடம் கேட்டுக் கொண்டார். ஆனால் அதற்கு ஒருவரும் இணங்கவில்லை. ஆகவே அந்த வருஷம் முதல் தமக்கும் தம்மைப் போன்ற மற்றப் பெண்களுக்கும் இம்மாதிரி ஸ்ரீ தியாகப்பிரம்ம உற்சவ கைங்கரியத்தில் ஈடுபட்டுக் கச்சேரி செய்யப் போதுமான வசதி இருக்க வேண்டும் என்று நினைத்தார். ஆகவே அதிஷ்டானத்துக்குப் பக்கத்திலேயே ஒரு கொட்டகையைப் போட்டு அதில் பஞ்சமி முதல் ஐந்து நாள் உற்சவம் நடத்தப் போவதாகப் பத்திரிகைகளை அச்சிட்டு எல்லோருக்கும் அனுப்பினார். கச்சேரி களைகளைச் செய்யக் கூடிய எல்லாப் பெண்மணிகளும் அந்தக் கோஷ்டியில் சேர்ந்தார்கள். இந்த மூன்றாவது கோஷ்டியில் சமாந்திரமான சாப்பாடு என்று வைத்துக் கொள்ளாமல் வந்திருக்கும் வித்வத் கோஷ்டிகளுக்கு நல்ல இடம், சாப்பாடு ஆகிய வசதிகளைக் கொடுத்து உபசரித்தார்கள். ஆகவே சில புருஷர்களும் அங்கு போய்க் கச்சேரி செய்தார்கள். இப்படியாகச் சின்னக் கட்சி, பெரியக் கட்சி, பெண்கள் கட்சி என்ற மூன்று கட்சிகளின் உற்சவங்களும் சில வருஷங்கள் நடந்தன.

பிரகாச சபையோராகிய சின்னக் கட்சியார் அதிஷ்டானத்துக்குள் சென்று தங்கள் பூஜையை நிதானமாக நடத்தி முடித்துக் கொண்டு புஷ்ய மண்டபம் திரும்பினார்கள்.

அன்று மாலை பல்லடம் சஞ்சீவி ராவின் கச்சேரி நடந்தது. அப்பொழுது அவரைப் பாராட்டி ஒரு அன்பர் சுமார் மூவாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள நவரத்னமாலை ஒன்றைச் சன்மானம் செய்து மகிழ்ந்தார். இரவு மாங்குடி சிதம்பர பாகவதரின் கதை நடந்தது. சென்ற நான்கு வருஷங்களாக மாங்குடி பாகவதரின் காலக்ஷேபத்தைக் கேட்க முடியாமலிருந்த மகாஜனங்கள் அநேக ஊர்களிலிருந்தும் திரளாக வந்து கேட்டு ஆனந்தித்தனர். திருவையாற்றில் ஆராதனை உற்சவம் ஆரம்பமானதிலிருந்து அம்மாதிரியான கூட்டம் கூடியதேயில்லை என்று சொல்லலாம். இப்படியாக 1924-ம் வருஷம் வரை பலவீனமடைந்திருந்த சின்னக் கட்சியாரின் உற்சவம் அது முதல் மறுபடியும் பலம் பெற்றது.

சின்னக் கட்சியாரின் 1926-ம் வருஷத்திய உற்சவம் நடந்து கொண்டிருக்கையில் வைத்தியநாதபாகவதர், சிதம்பர பாகவதர், ராஜகோபால பாகவதர் ஆகிய நால்வருக்கும் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டிலிருந்து சம்மன் வந்திருந்தது. அவர்களும் மறுநாள் கோர்ட்டில் ஆஜரானார்கள்.

"சென்ற வருஷத்திலேயே நாங்கள் எல்லோரும் தடுத்திருந்தும் சின்னக் கட்சியார் அதிஷ்டான பூஜையை நடத்திவிட்டார்கள். அம்மாதிரி இந்த வருஷமும் நடத்தக் கூடாது. அதிஷ்டானத்துக்குக் கும்பாபிஷேகம் செய்து, தினப்படி பூஜைக்கு ஏற்பாடு செய்திருக்கும் நாகரத்தினம்மாளின் அபிப்பிராயப்படி நாமுதான் பூஜை செய்ய வேண்டும்" என்று வாதிக்க, ஸ்ரீமதி நாகரத்தினம்மாளுக்காக கோவிந்தசாமிப் பிள்ளை முதலியோர் கோர்ட்டுக்கு வந்திருந்தனர். இரண்டு கட்சிகளையும் ஆதியோடந்தமாக விசாரித்த மாஜிஸ்ட்ரேட் "மனுதாரர்களின் வாதம் செல்லக்கூடியதல்ல. வழக்கம் போல் ஸ்ரீ தியாகராஜ பரப்பிரம்ம வைபவப் பிரகாச சபையாரின் பிரதிநிதி யொருவர் புஷ்ய பகுள பஞ்சமியன்று அதிஷ்டான பூஜையை நடத்த இடம் கொடுக்க வேண்டும்" என்று தீர்ப்பளித்து விட்டார்.

அந்த வருஷம் முதல் திருவையாறு உயர்தரப் பள்ளியில் ஆரம்பிக்கப்பட்ட சின்னக் கட்சியாரின் உற்சவம் அமோகமாய் நடக்க ஆரம்பித்தது. சின்னக் கட்சியார் தங்கள் கட்சியை நிர்வகித்து நடத்த அரியக்குடி ராமானுஜய்யங்காரைக் காரியதரிசியாகவும் மைலாட்டூர் மிருதங்கம் சாமி அய்யரையும் என்னையும் நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்களாகவும் நியமித்தனர்.

அடுத்த வருஷம் திருச்சி மலைக் கோட்டை நூற்றுக்கால் மண்டபத்தில் ஒரு சங்கீத விழா ஏற்பாடு செய்து, ஏராளமாக வசூல் செய்தோம். சின்னக் கட்சியாரின் உற்சவம் இன்னும் பிரபலமடைந்தது. இந்தச் சமயத்தில் சின்னக் கட்சியின் அதிஷ்டான பூஜைக்கு வெகுகாலமாய் நாதஸ்வரம் வாசித்து வந்த திருவையாறு வித்வான்கள் எந்தக் காரணத்தினாலோ திடீரென்று நாங்கள் வாசிக்க முடியாது என்று சொல்லி விட்டார்கள். ஆகவே அடுத்த



டாக்ஸி டிரைவர் சொன்னதைக் கேட்டதும் பாகவதருக்கு உச்சி குளிர்ந்துவிட்டது. அளவில்லாதத் தோஷம்கொண்டு, "சரி, அங்கேயே போ!" என்றார் உற்சாகத்துடன்.



சபா வாசலில் இறங்கியவுடன், டாக்ஸிக்காரன் ஐந்து ரூபாய் அதிகம் பெற்றுக் கொண்டு, "தாங்க் யூ, மிஸ்டர் சபேச பாகவதர்வாள்!" என்றும்............



சபேச பாகவதர் தம் 'இது இது' என்று கற்பனை செய்யும்?

பிரமாதமாய் நடத்தி வந்தார்கள். அப்பொழுது எதிர்பாராதவிதமாக ஒரு ரஸமான சம்பவம் நிகழ்ந்தது. பொங்கல் பண்டிகையன்று ஸ்ரீமதி ரகாரத்தினம்மாள், பிடில் கோவிந்தசாமிப் பிள்ளை, அழக நம்பியாப் பிள்ளை ஆகியவர்கள் சின்னக் கட்சியாரிடம் வந்து, "பஞ்சமியன்று அதிஷ்டான பூஜையை ராமுடு பாகவதரைக் கொண்டு தான் நடத்தவேண்டுமேயன்றி வேறு யாரும் செய்யக்கூடாது" என்று தெரிவித்தார்கள்.

வைத்தியநாத பாகதர், சிதம்பர பாகவதர், சஞ்சீவிராவ் ஆகியோர் இதற்குச் சம்மதிக்கவில்லை. "வழக்கம்போல் நாங்கள் நடத்தும் பூஜைக்கு நீங்கள் இடம் கொடுத்துத்தானாக வேண்டும். அதிஷ்டானத்தைச் சுற்றிக் கட்டிடம் கட்டிவிட்டதால் விசேஷமான பாத்தியதையை யாரும் கொண்டாட முடியாது" என்று சொன்னார்கள்.

ஒருவருக் கொருவர் விட்டுக் கொடுப்பதாயில்லை. ஆகவே கோவிந்தசாமிப் பிள்ளை "அப்படியானால் உங்கள் கட்சியாரின் பூஜையே நாளைக்கு நடைபெறாது" என்றார்.

உடனே வைத்தியநாத பாகவதர் "தியாகப் பிரம்மத்தின் அபிப்பிராயம் அவ்வாறானால் நாங்கள் தான் என்ன செய்ய முடியும்? ஏதோ பார்ப்போம்" என்று தெரிவித்து விட்டார். எல்லாரும் போய் விட்டனர்.

பஞ்சமியன்று காலை ஒன்பது மணிக்கு வழக்கம் போல் சின்னக் கட்சியார் அதிஷ்டான பூஜைக்குக் கிளம்பிப் போய்க்கொண்டிருந்தார்கள். கொஞ்ச தூரம் போனவுடன் பெரிய கட்சியார் தங்கள் பூஜையை முடித்துக் கொண்டு அதிஷ்டானத்தையும் பூட்டிக் கொண்டு போய்விட்டதாய்த் தெரிந்தது.

சின்னக் கட்சியாரின் உற்சவத்தில் சென்று நான்கு நாட்களாய் மிருந்த சிரத்தையுடன் ஈடுபட்டிருந்த திருவையாறு சப்மாஜிஸ்ட்ரேட் ஸ்ரீ தாஸ் ராவுக்குச் சொல்லியனுப்பி அவரையும் கூட அழைத்துக் கொண்டு போனார்கள். அதிஷ்டானத்தில் வேடிக்கை பார்க்க ஆயிரக் கணக்கான ஜனங்கள் கூடி யிருந்தனர்.

சப் மாஜிஸ்ட்ரேட் தக்க பந்தோபஸ்துடன் அதிஷ்டானம் வந்து சேரும்படி போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு உத்தரவு அனுப்பினார். எல்லோரும் அதிஷ்டானம் போய்ச் சேர்ந்தவுடன் ஸ்ரீ தாஸ் ராவ் ராமுடுவுக்குச் சொல்லியனுப்பினார். ராமுடுவும் உடனே வந்துவிட்டார்.

"அதிஷ்டானத்துச் சாவி உம்மிடம் தானே யிருக்கிறது?" என்று சப்மாஜிஸ்ட்ரேட் ராமுடுவைக் கேட்டார்.

"ஆமாம்" என்றார் ராமுடு.

"இந்தக் கோஷ்டியார் வெகுகாலமாக இன்றைய அதிஷ்டான பூஜையை நடத்தி வருவது உமக்குத் தெரிந்திருந்தும் ஏன் பூட்டிக்கொண்டு போனீர்?" என்று சற்றுக் கோபமாகக் கேட்டார்.

"நானாகப் பூட்டவில்லை. அவர்கள் சொன்னார்கள்" என்றார்.

"அதெல்லாம் பின்னால் விசாரித்துக் கொள்வோம். உடனே அதிஷ்டானத்துப் பூட்டைத் திறவும்" என்று சப் மாஜிஸ்ட்ரேட் சொன்னவுடன் ராமுடு அதிஷ்டானத்தைத் திறந்துவிட்டார்.

வைத்தியநாத பாகவதர் "சீதா காந்த ஸ்மரணம்" என்று சொல்ல அனைவரும் "ஜய ஜய ராம்" என்று கோஷித்தார்கள். ஸ்ரீ தியாகராஜ பரப்பிரம்ம வைபவப்



சாந்துக்குடி சபேச பாகவதர் கச்சேரி செய்வதற்காக சபாவுக்குக் கிளம்பினார்.



ஒரு டாக்ஸியில் ஏறிக்கொண்டு டிரைவரை நோக்கி "இன்று எதாவது ஒரு நல்ல பாட்டுக் கச்சேரிக்குப் போகவேண்டும். எதற்குப் போகலாம்?" என்று கேட்டார்.



டாக்ஸி டிரைவர், "இன்றைக்கு நல்ல கச்சேரி கேட்க வேண்டுமென்றால் ஞானோதய சபாவுக்குத்தான் போகவேண்டும். அங்கே சபேச பாகவதர் பாடுகிறார்!" என்றான்.

# திருவையாறு திருவிழா





**கோட்டு வாத்தியம் ஸ்ரீ துரையப்ப பாகவதர்**

## 6. அதிஷ்டான கும்பாபிஷேகம்

**1924**-ம் வருஷம் வரை சுமார் பத்து வருஷகாலம் பெரிய கட்சியின் முழு நிர்வாகத்தையும் பிடில் கோவிந்தசாமிப் பிள்ளை திறமையுடன் நிர்வகித்து வந்தார். இதர வித்துவான்களின் ஒத்தாசைகளை எதிர் பார்க்காமலும் பொது வசூல்களில், அவர் அதிகமாக ஈடுபடாமலும் உற்சவத்தை நடத்தினார். அதனால் சில வருஷங்களில் தம் சொந்தப் பணத்திலிருந்துகூட உற்சவக் காரியங்களுக்குச் செலவு செய்யும்படி நேர்ந்தது. அவருக்கு உதவியாக நீண்ட காலமாகவே நாதஸ்வர வித்துவான்கள் கீரனூர் சகோதரர்களும், ஸ்ரீ வீருசாமிப் பிள்ளையும், திருவீழிமிழலை சகோதரர்களும் இருந்து வந்தார்கள். வசூல் விஷயங்களிலும் தங்களாலாகிய ஒத்தாசைகளைச் செய்தார்கள். இந்த சமயத்தில் சங்கீத உலகில் ஒரு புரட்சியை உண்டாக்கிப் பிரபலமடைந்து வந்த காஞ்சிபுரம் நாயினாப்பிள்ளை என்கிற சுப்ரமண்ய பிள்ளையும் இந்தக் கோஷ்டியில் சேர்ந்து கொண்டு தம்முடைய கச்சேரிகள் மூலம் கிடைக்கும் ரூபாய்களை ஆராதனை உற்சவத்துக்குக் கொடுத்து வந்தார்.

இரண்டு கோஷ்டிகளும் பிரதி வருஷமும் ஆயிரக் கணக்கில் செலவு செய்து உற்சவத்தை நடத்திவந்தபோதிலும் அதிஷ்டானத்துக்குக் கட்டிடம் அமைக்கும் விஷயத்தில் ஒருவரும் சிரத்தை கொள்ளவில்லை.

இந்தக் குறையை நீக்கி அதிஷ்டானத்துக்குக் கட்டிடம் கட்டிய பெருமை ஒரு தனிப்பட்ட பெண்மணியைச் சேர்ந்தது என்பதைக் குறிப்பிட வேண்டும்.

பங்களூர் ஸ்ரீமதி நாகரத்தினம்மாள் சங்கீத உலகில் மிகுந்த புகழுடன் விளங்கி ஏராளமாகப் பொருள் சேர்த்துக் கொண்டு சௌகர்யமாகச் சென்னையில் வசித்து வந்தார்கள். அப்பொழுது அவர்களுக்குச் சுமார் நாற்பத்தைந்து வயது இருக்கும். குழந்தைகள் இல்லாததால் ஒரு பெண்ணை அபிமான புத்திரியாக ஏற்று வளர்த்து வந்தார். தம்முடைய வயோதிக காலத்தில் தமக்கு ஆதரவாக அந்தப் பெண் இருப்பாள் என்று நினைத்துச் சந்தோஷமாக வாழ்ந்து வருகையில், அவர் குடும்பத்தில் ஏற்பட்ட சம்பவம் அவரை உலக வாழ்க்கையிலேயே வெறுப்படையும்படி செய்து விட்டது.

தியாகப் பிரம்மத்தின் கீர்த்தனைகளின் மூலம்தானே அவருக்குப் புகழும், பணமும் கிடைத்தது? ஆகையால் அந்தப் புகழையும் பொருளையும் தியாகப்பிரம்மத்துக்கே அர்ப்பணம் செய்துவிட வேண்டும் என்று தீர்மானம் செய்து விட்டார்.

திருவையாற்றில் உள்ள அதிஷ்டானத்தைச் சீர்ப்படுத்திச் சுற்றிலும் கட்டிடம் கட்ட வேண்டும் என்று முடிவு செய்தார். அதற்காக வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் வெகு வேகமாக நடந்தது. சில மாதங்களில் கட்டிடத்தைக் கட்டி அதிஷ்டான பிருந்தாவனத்திற்கு முன் பக்கத்தில் ஸ்ரீ தியாகப் பிரம்மத்தின் விக்கிரகத்தையும் பிரதிஷ்டை செய்து 1925-ம் வருஷம் ஜனவரி மாதம் கும்பாபிஷேகத்தை நடத்தி வைத்தார்.

உற்சவ சமயங்களைத் தவிர மற்றக் காலங்களில் கவனிப்பாரற்றுக் கிடந்த அதிஷ்டானத்தையும் கர்ப்பக்கிருஹ மண்டபத்தையும் அதற்கு முன்பக்கமுள்ள மண்டபத்தையும் சுற்றி இரும்புக் கிராதிகள் போட்டுப் பந்தோபஸ்து செய்யப்பட்டது. தினமும் பூஜை செய்துவர ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் சமயஞர் பேரனாகிய ராமுடுவையே ஏற்பாடு செய்தார்கள்.

இவைகள் எல்லாம் முடிந்த சில நாட்களில் ஸ்ரீ தியாகப் பிரம்மத்தின் ஆராதனை உற்சவம் ஆரம்பமாயிற்று. சின்னக் கட்சியார் வழக்கம்போல் தங்கள் உற்சவத்தைப் புஷ்ய பகுளப் பிரதமையன்று ஆரம்பித்துப்

அமோகமான ஆதரவுடன்

முருகன் டாக்கீஸாரின்

# ரத்னகுமார்

கீழ்க்கண்ட இடங்களில் நடைபெறுகிறது

| 3 - வது வாரம் | | 2 - வது வாரம் | |
|---|---|---|---|
| மதுரை ... | நியூ சினிமா | வேலூர் ... | தினகரன் |
| | சிந்தாமணி | புதுச்சேரி ... | கமர்ஷியல் |
| திருச்சி ... | சென்ட்ரல் | தஞ்சாவூர் ... | நியூ டவர் |
| சேலம் ... | அம்பிகா | திருப்பாப்புலியூர் - | நியூ சினிமா |
| சிதம்பரம் ... | வடுகநாதன் | காரைக்குடி ... | ஸ்ரீராம் |

30 - 12 - 49 முதல்

திருநெல்வேலி ...பாலமுருகன், (ராயல்) டாக்கீஸ்

கோயமுத்தூர் ... ராஜா, ஷண்முகா, பாலன்





டைரக்டர்: கிருஷ்ணன் பஞ்சு

ஸ்டுடியோ: நியூடோன்

விபரங்களுக்கு: முருகன் டாக்கி பிலிம் கம்பெனி

காந்திக்கு ஒரு சிறந்த ஞாபகார்த்தம் வேண்டும் என்று எண்ணுகிறவர்கள், அவர்களுடைய கைங்கரியத்தைப் புது வருஷ ஆரம்பத்தில் செய்யும்படி கேட்டுக் கொள்கிறோம்.

கூடுமானால் ஜனவரி மாதம் முதல் வாரத்தில் உங்களுடைய நன்கொடையை அனுப்புங்கள். அல்லது ஜனவரி மாத முடிவுக்குள்ளாவது அனுப்பிவைக்கப் பாருங்கள். புது வருஷத்தை இந்தப் புனித கைங்கரியத்துடன் ஆரம்பியுங்கள்.

* * *

தமிழ் நாட்டில் நம் காலத்தில் வெளியாகியிருக்கும் நாடகங்களுக்குள் தலை சிறந்தது,—அமரத்வம் வாய்ந்தது—எது என்று கேட்டால் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் "மனோகரன்" என்று சொல்வார்கள். நம் மா பெருங் கிழவர்களில் ஒருவரான ஸ்ரீ பி. சம்பந்த முதலியார் சுமார் 40 வருஷங்களுக்கு முன்னால் எழுதிய நாடகம். இன்றைக்கும் தனக்கு நிகரில்லை யென்ற புகழுடன் விளங்குகிறது. அந்த நாடகத்தை ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்கள் ஜனவரி மாதம் 11-தேதி மகாத்மா ஸ்தூபி நிதியின் உதவிக்காக நடிக்கிறார்கள்.

எந்த விதமான பொதுநலத் தொண்டிற்கும் உதவி செய்ய ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்கள் முன்னணியில் நிற்பவர்கள் என்பது அனைவரும் அறிந்ததே. ஆதலின் இந்தத் தொண்டிலும் அவர்கள் முன்னால் நின்று உதவி தருவதில் வியப்பு எதுவும் இல்லை. மேன்மை தங்கிய கவர்னர் பவநகர் மகாராஜா அவர்கள் நாடகத்துக்குத் தலைமை வகிக்கிறார்கள்.

* * *

ஜனவரி மாதம் 14-ந் தேதி பொங்கல் புது நாள் அன்று சைதாப்பேட்டையில் "திருமகள் டாக்கீஸ்" என்னும் புதிய ஸினிமாவின் கொட்டகைக்குக் கனம் பக்தவத்ஸலம் முன்னிலையில் திறப்பு விழா நடைபெறுகிறது. அன்றைக்கு இரண்டு ஆட்டத்திலும் கிடைக்கும் வசூல் தொகையை மகாத்மா ஸ்தூபி நிதிக்குத் தருவதற்கு அதன் சொந்தக்காரர் முன் வந்திருக்கிறார். அவர் வேறு யாருமில்லை; முதலாவது ஆயிரத்தொரு ரூபாய் நன்கொடை தந்த திரு சண்முகேசன் அவர்கள்தான்! ஒரு காரியத்தில் ஈடுபட்டால் இப்படியல்லவா முழு மனதுடன் ஈடுபட வேண்டும்!

* * *

சேலம் பேட்டையில் சுதேசிப் பொருட்காட்சி ஒரு மாபெரும் விழாவாகவும் கொண்டாட்டமாகவும் நடைபெற்று வருகிறது. இந்தக் கண்காட்சியில் ஒரு நாள் நிகர வருமானத்தை மகாத்மா ஸ்தூபி நிதிக்குத் தருவதற்குக் கண்காட்சி நிர்வாகிகள் இசைந்திருக்கிறார்கள். இதன் தேதி நிர்ணயமானதும் தெரியப் படுத்துகிறோம்.

இவை யெல்லாம் மகிழ்ச்சிகரமான செய்திகள். எனினும் அந்த மகிழ்ச்சியில் நீங்கள் அனுப்ப வேண்டிய நன்கொடையை மறந்து விடாதீர்கள். பெயர்—விலாசத்துடன் குறிப்பிட்டுக் கொடுப்பதில் ஒரு தனிப் பெரும் மகிழ்ச்சி இருக்கத்தானே இருக்கிறது!

# மூவுலகும் கேட்கும்

கோபுரத்தின் உச்சிமீது பெரியதொரு முரசை வைத்து அதை அடிக்கும் கோலினால் 'தம்! தம்!' என்று அடிக்கின்றார்கள். அதன் சத்தம் எவ்வளவு தூரம் கேட்கும் தெரியுமா? ஒரு காத தூரம் வரையில் கேட்கும்! அதிசயமான விஷயம்.

வானத்தில் கருமேகங்கள் ஒன்றோடொன்று மோதும்போது இடி இடிக்கின்றதே! அது எத்தனை தூரம் கேட்கும் தெரியுமா? ஒரு யோசனை அதாவது பத்து காத தூரம் கேட்குமாம்!—நாலடியார் என்னும் பழந்தமிழ் நூலை எழுதிய முனிவர் அவ்விதம் கூறினர்.

முரசொலியையும் இடி முழக்கத்தையும் விட அதிக தூரம் கேட்கக் கூடியது ஒன்று இருக்கிறது என்றும் நாலடியாரில் சொல்லியிருக்கிறது. திக்குத் திகந்தங்களையெல்லாம் தாண்டி உலக முழுவதும் பரவி, மேலே மேக மண்டலங்களையெல்லாம் தாண்டி வானுலகம் சென்று, கீழே பாதாள லோகத்துக்குக் கூடத் தோண்டிக் கொண்டு போய்க் கேட்குமாம்! அது என்ன? ஒருவர் ஒரு உத்தமமான திருப்பணிக்கு உவந்து நன்கொடை தந்தார் என்னும் சொல் அவ்வாறு மூன்று உலகங்களிலும் சென்று கேட்குமாம்.

அந்தப் பாட்டைக் கேளுங்கள் :—

கடிப்படி கண்முரசம்
காதத்தோர் கேட்பர்

இடித்து முழங்கியது
யோசனையோர் கேட்பர்

அடுக்கிய மூவுலகும்
கேட்குமே! சான்று

கொடுத்தார் எனப்படும்
சொல்!

[கடிப்படி : முரசு அடிக்கும் கோல்.]

இவ்விதம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நமது செந்தமிழ் நாட்டுப் பெரியார் ஒருவர் சொல்லி விட்டுப் போனார். கொடுப்பதின் சிறப்பை நம் முன்னோர் எவ்வளவு அற்புதமாக உணர்ந்து அநுபவித்துச் சொல்லியிருக்கிறார்கள்?

கொடுப்பது சிறப்பான செயல்; மூவுலகத்துக்கும் புகழ் பரப்பக் கூடிய செயல்.

பாரத நாட்டிற்குச் சுதந்திரம் தேடித்தந்து, அந்தச் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காக உயிரை நீத்த மகாபுருஷருடைய ஞாபகத்தை நிலை நாட்டக் கூடிய திருப்பணிக்குக் கொடுப்பதைக் காட்டிலும் உயர்ந்த கொடை வேறு என்ன இருக்கக்கூடும்? 'கொடுத்தார் எனப்படும் சொல்' இப்படிப்பட்ட புண்ணிய கைங்கரியத்துக்கு நன்கொடை அளித்தல்லவா பெறவேண்டும்!

* * *

ஒரு நல்ல காரியத்தினால் இன்னொரு நல்ல காரியம் ஒரு நாளும் தடைப்பட்டுப் போவதில்லை என்பதை நேயர்களுக்கு எடுத்துக் காட்ட விரும்புகிறோம்.

எவ்வளவோ நல்ல கைங்கரியங்கள் செய்வதற்கு இருக்கின்றன; எல்லாம் செய்ய வேண்டியதுதான்.

நல்ல காரியங்களுக்குக் கொடுத்துப் பழக்கப் பட்டவர்கள்—கொடுப்பதில் உள்ள மகிழ்ச்சியைக் கண்டவர்கள்,—இந்தக் கைங்கரியத்துக்கும் கொடுப்பார்கள்; மற்ற நல்ல காரியங்களுக்கும் கொடுப்பார்கள்.

ஒன்றுக்குமே கொடுக்க மனமில்லாத புண்ணியவான்கள் "இது என்னத்திற்கு? அது என்னத்திற்கு?" என்று கேட்டுச் சுக்கிராச்சாரியாரின் வேலையைச் செய்வார்கள்.

வருஷத்தில் பலகோடி ரூபாய் இந்த மாகாணத்தில் சினிமாப் பார்ப்பதில் மட்டும் ஜனங்கள் செலவு செய்கிறார்கள். அதில் ஒரு மிகச் சிறுபகுதி மகாத்மா ஞாபகார்த்த ஸ்தூபி கட்டுவதற்குச் சேர்ந்தால் போதும்.

மகாத்மாவினிடம் பக்தியுள்ளவர்கள்,—சென்னை நகரில் மகாத்மா

# பிச்சை எடுத்த பெருமான்

முன்பெல்லாம் மேல் நாடுகளுக்குச் சென்றால், "ஐயா, தாங்கள் எந்தத் தேசத்தவர்?" என்று கேட்பார்களாம்.

அதற்கு "நான் இந்தியாவிலிருந்து வருகிறேன்" என்று பதில் கூறினால் ஒருவருக்கும் புரியாதாம். "இந்தியா என்று ஒரு தேசங்கூட இருக்கிறதா?" என்று கேட்பார்களாம். ஆனால் "காந்தி பிறந்த தேசத்திலிருந்து வருகிறேன்" என்று கூறினால் "ஓஹோ, மகாத்மா காந்தியா? நான் அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் பிறந்த நாட்டிலிருந்து வருகிறீர்களா?" என்று கூறிக் கையெடுத்துக் கும்பிடுவார்களாம்.

இவ்விதம் உலக மக்களிடையே பாரத தேசத்தின் பெருமையை உயர்த்தியவர் மகாத்மா காந்தி. அவருக்கு அடுத்தபடி கவி ரவீந்திரநாத் டாகூர் பாரத நாட்டின் பெருமையைப் பெரிதும் உயர்த்தியிருக்கிறார்.

1910-ம் வருஷ வாக்கில் ரவீந்திரரின் சில கவிகள் ஐரிஷ் நாட்டுப் பிரபல கவியான ஈட்ஸ் என்பவர் கையில் கிடைத்தன. ரவீந்திரரின் கவிகளைப் படித்தவுடன் ஈட்ஸ் அவற்றில் மனதைப் பறிகொடுத்து, சென்ற சென்ற இடமெல்லாம் தமது சட்டைப் பையில் அந்த ஏடுகளை வைத்துச் சென்று படித்துக் கொண்டிருந்தார். பிறகு இன்னும் சில மேல்நாட்டு இலக்கியப் புலவர்களிடை இந்த ஏடுகள் பரவலாயின. இதன் விளைவாகக் கடைசியில் ரவீந்திரருக்கு நோபல் பரிசு கிடைத்தது.

நோபல் பரிசு பெற்றவுடன் உலக மக்கள் ரவீந்திரரை மதிக்கத் தொடங்கினர். அவர் இயற்றிய நூல்களைப் பல்வேறு மொழிகளில் மொழி பெயர்த்துப் படிக்கலாயினர். அவரை வரவேற்று உபசரித்தனர். கவி ரவீந்திரரும் பாரத நாட்டுக் கலைப் பண்பு, மனப் பண்புகளைப் பற்றி உலகத்தின் மேல் கோடியிலிருந்து கீழ் கோடிவரை பரப்பிப் பாரதத்தின் பழம் பெரும் புகழை நிலைக்கச் செய்தார்.

நோபல் பரிசுபெற்ற 'கீதாஞ்சலி'யில் பக்திச் சுவை நிரம்பிய பாடல்கள் பல. அவற்றில் ஒரு கவிதை ஒரு பிச்சைக்காரி கூறுவதாக இருக்கின்றது. அது பின் வருமாறு:—

நான் தெருவில் வீடு வீடாய்ப் பிச்சை எடுத்துக் கொண்டிருந்தேன். அப்போது உன் பொன் வேய்ந்த ரதம் தூரத்தே ஆச்சரியமான கனவு போல் தோன்றியது. நான் 'இந்த மன்னர் மன்னன், யாராக இருக்கக் கூடும்!' என்று வியந்து நின்றேன்.

அடுத்த கணம் உன்மேல் எனக்கு அளவு கடந்த ஆசையும் நம்பிக்கையும் ஏற்பட்டது. என் துன்பம் தொலைந்தது என்று எண்ணினேன். நான் கேட்காமலே எனக்குப் பிச்சை கிடைக்கும் என்று நினைத்தேன். ஏனெனில் உன்னைச் சுற்றி நாற்புறமும் பொன்னும் மணியும் மண்ணில் சிதறிக் கிடந்தன.

நான் நின்ற இடத்தில் ரதம் நின்றது. உன் அருள் நோக்கு என் மீது விழுந்தது; நீயும் ஒரு புன் முறுவல் என்னைப் பார்த்துப் புரிந்தாய். என் வாழ்வின் அதிர்ஷ்டம் கடைசியில் வந்ததாகக் கருதினேன்.

அப்பொழுது நீ திடீர் என்று உன் வலது கரத்தை நீட்டி "எனக்குக் கொடுப்பதற்கு நீ என்ன வைத்திருக்கிறாய்?" என்று என்னையே கேட்டு விட்டாய்.

'ஆ! என்ன வேடிக்கையிலும் வேடிக்கை, ராஜ வேடிக்கை போலிருக்கிறதே!' என்று நினைத்தேன். உன் கரத்தைப் பிச்சைக்காரியிடமா நீட்டுவது? எனக்கு ஒரே குழப்பமாக இருந்தது. என்ன செய்வது என்று தெரியாது திக்பிரமை கொண்டு நின்றேன். பிறகு மெள்ள என் பையிலிருந்து சின்னஞ்சிறு நெல் மணியை எடுத்து உன் கையில் கொடுத்தேன்.

அன்றையப் பகல்பொழுது முடிந்து, மாலை என் பையைக் கீழே கொட்டிப் பார்த்த போது எனக்கு எவ்வளவு பெரிய ஆச்சரியம் ஏற்பட்டது! தரையில் சின்னஞ்சிறு பொன்மணி அந்தப் பிச்சைக் குவியலில் இருந்தது! அதைக் கண்டவுடன் ஆற்ற துயரம் ஏற்பட்டது; அழுது விட்டேன்.

'நீ கை நீட்டி என்னிடம் பிச்சை கேட்ட போதே என்னிடமிருந்த அவ்வளவையும் உனக்குக் கொடுக்க மனம் இருந்திருக்கக் கூடாதா?' என்று எண்ணி ஏங்கினேன்.

* * *

இந்தக் கவிதையில் வரும் ஒரு காட்சியை நமது சித்திரக்காரர் பின்புலமாக அமைத்துப் பாரதத்தாயின் அருந்தவப் புதல்வராகிய கவி ரவீந்திரநாத் டாகூரை இந்த இதழ் அட்டையில் சித்திரித்திருக்கிறார்.

மகாத்மா அச்சமயம் "ஒரு பெருங் கறை" என்ற கட்டுரையை "யங் இந்தியா"வுக்கு எழுதிக் கொண்டிருந்தார். பின்வருமாறு அவர் எழுதினார் :—

"இதை நான் எழுதிக் கொண்டிருக்கும்போதே ஆறு ஹிந்து முஸ்லிம் தொண்டர்கள் மண்டை உடைபட்டு இரத்தக் காயங்களுடன் திரும்பி வந்திருக்கிறார்கள். ஒருவர் மூக்கு எலும்பு உடைந்து உயிர் பிழைப்பதே கடினம் என்ற நிலையில் வந்திருக்கிறார். இவர்கள் பரேலில் தொழிலாளிகள் டிராம் வண்டிகளைத் தடை செய்கிறார்கள் என்று கேள்விப்பட்டு அவர்களைச் சாந்தப்படுத்துவதற்காகச் சென்றார்கள். ஆனால் பரேலுக்கு அவர்களால் போய்ச் சேர முடியவில்லை; அவர்களுக்கு நேர்ந்தது என்னவென்பதை அவர்களுடைய காயங்களே சொல்லுகின்றன.

"ஆகவே, பொதுஜனச் சட்டமறுப்பை ஆரம்பிக்கலாம் என்னும் என் நம்பிக்கை மண்ணோடு மண்ணாகி விட்டது. சட்டமறுப்புக்கு வேண்டிய சூழ்நிலை ஏற்படவில்லை. அத்தகைய நிலைமை பர்தோலியில் குடிகொண்டிருப்பது மட்டும் போதாது. பம்பாயில் பலாத்காரம் தலைவிரித்தாடும் போது பர்தோலியில் சாத்விகம் குடிகொண்டிருப்பது இயலாத காரியம். பர்தோலியையும் பம்பாயையும் தனித்தனிப் பிரிவுகளாகக் கருத முடியாது.

"ஒத்துழையாமைத் தலைவர்கள் பம்பாய்ச் சம்பவங்களுக்குப் பொறுப்பு ஏற்றுக்கொண்டே தீரவேண்டும். அவர்கள் நகரத்தில் பல பகுதிகளிலும் சென்று ஜனங்களைச் சாந்தப்படுத்த முயற்சி செய்தது உண்மைதான்; பல உயிர்களைக் காப்பாற்றியிருப்பதும் உண்மைதான். ஆனால் இதைக்கொண்டு நாம் திருப்தியடைவதற்கில்லை. இதைக் காரணமாய்ச் சொல்லி வேறிடத்தில் சட்டமறுப்பை நடத்தவும் முடியாது. நேற்று நமக்கு ஒரு சோதனை நாள். அந்தச் சோதனையில் நாம் தவறி விட்டோம். வேல்ஸ் இளவரசருக்கு எந்தவிதமான தீங்கும் நேராமல் பாதுகாப்பதாக நாம் சபதம் செய்தோம். இளவரசரை வரவேற்பதற்காகப் போயிருந்த ஒரு தனி மனிதருக்கு அவமானமோ, பலாத்காரமோ நேர்ந்தாலும், நம்முடைய சபதத்தில் நாம் தவறியதே யாகும். இளவரசரின் வரவேற்புக்குப் போகாமலிருக்க நமக்கு எவ்வளவு உரிமை உண்டோ, அவ்வளவு உரிமை வரவேற்புக்குப் போக மற்றவர்களுக்கு உண்டு. மற்றவர்களின் உரிமைக்குப் பங்கம் செய்தது நம்முடைய விரத பங்கமே யாகும். என்னுடைய சொந்தப் பொறுப்பையும் நான் தட்டிக் கழிக்க முடியாது. புரட்சி ஆவேசத்தை உண்டாக்கியதில் மற்றவர்களைக் காட்டிலும் நான் அதிகமாகப் பொறுப்பு ஏற்றுக் கொண்டே தீரவேண்டும். அந்த ஆவேசத்தை நான் கட்டுக்குள் நிலை நிறுத்தி வைக்க இயலாதவனாகி விட்டேன். அதற்கு நான் பிராயச்சித்தம் செய்தாக வேண்டும். இந்தப் போராட்டத்தைத் தார்மீக அடிப்படையிலேயே நான் தொடங்கியிருக்கிறேன். உபவாச விரதத்திலும் பிரார்த்தனையிலும் நான் பூரண நம்பிக்கை உள்ளவன். ஆகவே, இனிமேல் சுயராஜ்யம் சித்தியாகும் வரையில் ஒவ்வொரு திங்கட்கிழமையும் இருபத்து நாலு மணி நேரம் உண்ணாவிரதம் இருப்பது என்று சங்கல்பம் செய்து கொள்கிறேன்.

"பம்பாய்ச் சம்பவங்களினால் ஏற்பட்டிருக்கும் நிலைமையைக் காங்கிரஸ் காரியக் கமிட்டியார் சீர்தூக்கிப் பார்த்து பொதுஜனச் சட்ட மறுப்பை ஆரம்பிக்கலாமா என்று முடிவு செய்யவேண்டும். பொது மக்களிடையில் பரிபூரண அஹிம்சை நிலவினாலன்றி என்னால் சட்ட மறுப்பு இயக்கத்தை வெற்றிகரமாக நடத்த முடியாது. சட்டமறுப்பை நிறுத்த வேண்டும் என்னும் முடிவு எனக்கு மிக்க வருத்தமளிக்கிறது. இது என்னுடைய சக்தியின்மைக்கு அத்தாட்சிதான். ஆனால் நானோ என்னை ஆளும் இறைவன் முன்னால் நிற்கும்போது, என்னுடைய உண்மையான யோக்யதையுடன் நிற்க விரும்புகிறேனே யல்லாமல் உள்ளதைக் காட்டிலும் அதிக சக்திமானாக வேஷம் போட்டுக்கொண்டு நிற்க விரும்பவில்லை. அரசாங்கத்தின் கட்டுப்பாடான பலாத்காரத்தை நான் எதிர்ப்பது போலவே பொது மக்களின் கட்டுப்பாடற்ற பலாத்காரத்தையும் எதிர்க்கிறேன். இந்த இருவகை பலாத்காரங்களுக்கு மிடையில் நசுக்கப்பட்டு உயிர் துறக்க நேர்ந்தால் அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை!"

மேற்கண்டவாறு மகாத்மா காந்தி எழுதிய கட்டுரையில் வாரா வாரம் அவர் திங்கட்கிழமை உபவாசம் இருக்க நேர்ந்த காரணம் இன்னதென்பதைக் காணலாம். ஆனால் இவ்விதம் வாரத்துக்கு ஒரு நாள் உபவாச விரதம் மகாத்மாவின் ஆத்ம சோதனைக்கு மட்டுமே பயன்படுவதாயிற்று. மக்களைத் தூய்மைப் படுத்துவதற்காக அவர் இன்னும் நீண்டகால உபவாச விரதங்கள் இருக்கும்படி நேர்ந்தது. ஏன்? பம்பாய் நிலைமை காரணமாகவே அவர் நீடித்த உண்ணாவிரதம் இருக்கும்படி ஆயிற்று. அதைப் பற்றி அடுத்த அத்தியாயத்தில் பார்க்கலாம்.

வருவதாகவும் மகாத்மா உடனே வந்து அவர்களைத் தடுக்க வேண்டும் என்றும் சொன்னார்கள். மகாத்மா தாம் எழுத ஆரம்பித்த கட்டுரையை முடித்துவிட்டுக் கிளம்ப எண்ணி, முதலில் மௌலானா ஆஸாத் ஸோபானியையும், மௌலானா முகம்மது அலியின் மைத்துனரான ஜனாப் மோஸம் அலியையும் பரேலுக்குப் போகும்படி சொன்னார்.

பரேல் தொழிலாளிகள் அன்றைக்குப் பார்ஸிகளைத் தாக்க யத்தனித்ததற்குக் காரணம் ஒன்று இருந்தது. அன்று காலையில் பம்பாயில் அமைதி குடிகொண்டிருந்ததல்லவா? அது புயலுக்கு முந்தைய அமைதியைப் போன்றதேயாகும். சற்று நேரத்துக்கெல்லாம் ஆங்காங்கு கலகங்கள் ஆரம்பித்தன. இந்தத் தடவை ஆரம்பித்தவர்கள் பார்ஸிகளும் ஆங்கிலோ இந்தியர்களுமாவர். முதல் நாள் அவர்களைத் திடீரென்று ஹிந்து - முஸ்லிம்கள் தாக்கினார்கள். அதனால் பார்ஸிகள் அதிக கஷ்டப்பட்டுப் போனார்கள். ஆனால் இராத்திரிக்கு இராத்திரியே அவர்கள் மறுநாள் பழி வாங்குவதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்துகொண்டார்கள். துப்பாக்கி வைத்துக்கொள்ளவும் உபயோகிக்கவும் சர்க்காரிடம் அநுமதி பெற்றுக்கொண்டார்கள். அவ்வளவுதான்; காலை ஒன்பது மணிக்கு மேலே பார்ஸிகளும் ஆங்கிலோ இந்தியர்களும் கும்பல் கும்பலாகக் கிளம்பி ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் தாக்குவதற்கு ஆரம்பித்தார்கள். ஹிந்து முஸ்லிம்களில் உயிர்ச் சேதங்களும் ஏற்பட்டன.

இதையறிந்ததும் ஹிந்து முஸ்லிம்கள் பழையபடி தடிகளைத் தூக்கிக்கொண்டு கிளம்பினார்கள். கண்ட இடங்களிலெல்லாம் பார்ஸிகளைத் தாக்க ஆரம்பித்தார்கள். பார்ஸிகள் வசிக்கும் இடங்களைத் தேடிப்போகவும் தொடங்கினார்கள். "அடியைப் பிடியடா பாரத பட்டா!" என்று நேற்று நடந்த பயங்கர சம்பவங்கள் இன்றும் ஆரம்பமாயின.

மௌலானா ஆஸாத் ஸோபானியும் ஜனாப் மோஸம் அலியும் காந்திஜியின் விருப்பத்தின்படி பரேல் பகுதிக்கு மக்களைச் சமாதானப்படுத்துவதற்காகச் சென்றார்கள் அல்லவா? அவர்களில் ஜனாப் மோஸம் அலியும் அவருடன் சென்றவர்களில் இருவரும் அரைமணி நேரத்துக்கெல்லாம் திரும்பிவந்தார்கள். அவர்கள் உடம்பெல்லாம் காயமாகி இரத்தம் வடிந்துகொண்டிருந்தது. தங்களுக்கு நேர்ந்த கதியைப் பற்றி அவர்கள் மகாத்மாவிடம் சொன்னார்கள். பார்ஸிகளும் ஆங்கிலோ - இந்தியர்களும் யூதர்களும் அடங்கிய ஒரு கூட்டத்தார் அவர்களை வழியில் வளைத்துக்கொண்டு தாக்கினார்களாம். அவர்கள் ஏறிச் சென்ற மோட்டார் வண்டி சுக்கு நூறாகி விட்டதாம்! உயிரோடு திரும்பி வருவதே பெரிய காரியம் ஆகிவிட்டதாம்! மௌலானா ஆஸாத் ஸோபானி வேறொரு வண்டியில் போனபடியால் அவருடைய கதி என்ன ஆயிற்று என்று தங்களுக்குத் தெரியாது என்று சொன்னார்கள். அடுத்தாற்போல் இன்னும் சில கிலாபத் இயக்கத் தொண்டர்கள் அதேமாதிரி அடிபட்டு மேலெல்லாம் இரத்தம் ஒழுகத் திரும்பி வந்தார்கள். அவர்களில் ஒருவருக்கு மண்டையில் பட்ட அடியினால் மூளை கலங்கிப் போயிருந்தது. "நாங்களும் எங்கள் இரத்தத்தைக் கொடுத்தோம்!" "நாங்களும் எங்கள் இரத்தத்தைக் கொடுத்தோம்" என்று அவர் இடைவிடாமல் கூச்சல் போட்டார்.



அகில உலகத்திலும் புகழ்பெற்ற நடனக் கலைஞரான ஸ்ரீ உதயசங்கரின் சகோதரர் ஸ்ரீ ரவிசங்கர் இசைக் கலையில் தலைசிறந்த மேதை. ஸித்தார் என்னும் வட இந்தியாவில் வழங்கும் தந்தி வாத்தியத்தை இணையில்லாத பாணியில் கையாண்டு ஹிந்துஸ்தானி சங்கீத ரஸிகர்களைப் பரவசப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தவர். இந்த வருஷத்து மியூஸிக் அகடமி சங்கீத விழாவில் இவருடைய கச்சேரி ஒரு சிறப்பான அம்சமாகும்.

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

ரா.கி.

## 28. கோட்டை தகர்ந்தது!

நவம்பர் மாதம் 17உ காலையில் வேல்ஸ் இளவரசர் 'இந்தியாவின் வாசல்' என்று சொல்லப்படும் பம்பாய்க் கடற்கரை மண்டபத்தில் வந்து இறங்கினார். அதிகார வர்க்கத்தார் பிரமாத வரவேற்புக்கு ஏற்பாடு செய்திருந்தனர். அந்த ஏற்பாடுகள் குறிப்பிட்ட திட்டத்தின்படி நடைபெற்றன. பம்பாய்ப் பொது மக்களில் மிகப் பெரும்பாலோர் அந்த வைபவங்களில் கலந்து கொள்ளவில்லை. ஆனால் ஒரு சாரார் கலந்து கொண்டனர். பம்பாய் மிகப் பெரிய நகரம். பார்ஸிகளும், ஆங்கிலோ இந்தியர்களும், கிறிஸ்துவர்களும் லட்சக்கணக்காக அந் நகரில் வசித்தனர். பம்பாயில் இருந்த சாராயக் கடைகள் பெரும்பாலும் பார்ஸிகளால் நடத்தப்பட்டன. மேலும் பார்ஸி வகுப்பினர் ஐரோப்பிய நாகரிகத்தில் மூழ்கியவர்கள். ஆகையால் சில மகத்தான தேசியத் தலைவர்கள் பார்ஸி வகுப்பினராயிருந்த போதிலும், அவர்களில் பெரும்பாலோர் மகாத்மாவின் ஒத்துழையாமை இயக்கத்தை ஒப்புக்கொள்ளவில்லை. மற்ற இருவகுப்பாரிலும் எப்போதும் அரசாங்க பக்தர்கள் அதிகம்.

எனவே, இளவரசர் விஜயத்தைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்று காங்கிரஸ் இட்டிருந்த கட்டளையை மீறிப் பம்பாயிலிருந்த பார்ஸிகளும் ஆங்கிலோ இந்தியர்களும் கிறிஸ்துவர்களும் வரவேற்பு வைபவங்களில் கலந்து கொண்டார்கள். வேல்ஸ் இளவரசரை வரவேற்று விட்டுத் திரும்பி வந்தவர்களும் அதே சமயத்தில் பம்பாய் நகரின் மற்றொரு மூலையில் நடந்த மகாத்மாவின் பொதுக் கூட்டத்திலிருந்து திரும்பியவர்களும் சாலைகளில் பல இடங்களில் எதிரிட்டுக்கொள்ள நேர்ந்தது. அவர்களுக்குள் கைகலப்பும் ஏற்பட்டது.

இளவரசரை வரவேற்றுவிட்டு வந்த பார்ஸிகளின் தலைகளிலிருந்த விதேசிக் குல்லாய்களையும் அவர்களுடைய உடம்பின் மீதிருந்த விதேசித் துணிகளையும் சிலர் பலவந்தமாக நீக்கித் தீயிலே போட்டார்கள். அதற்கு எதிர்ப்புச் செய்தவர்களை மக்கள் அடிக்கவும் செய்தார்கள். சாலைகளில் போன மோட்டார் வண்டிகளின் மீது கற்கள் எறியப்பட்டன. பொதுவாக, மோட்டாரில் வருகிறவர்கள் எல்லாரும் இளவரசர் வரவேற்பிலிருந்து திரும்புகிறார்கள் என்ற எண்ணத்தின் பேரில் மக்கள் மோட்டார்களைத் தாக்கினார்கள். முதலில் சாதாரணமாக ஆரம்பித்த இத்தகைய சம்பவங்கள் வரவரக் கடுமையாகின. ஆத்திரங் கொண்டிருந்த ஜனங்களைச் சில விஷமிகள் தூண்டிவிடவும் ஆரம்பித்தார்கள். சாராயக் கடைகளுக்கும் போலீஸ் ஸ்டேஷன்களுக்கும் தீ வைத்தார்கள். மோட்டார்களும் டிராம்களும் எரிக்கப்பட்டன. சில பார்ஸி பெண்மணிகளும் தாக்கப்பட்டனர்.

இம்மாதிரி செய்திகளைக் கேள்விப்பட்டதும் மகாத்மாவின் மனம் துடிதுடித்தது. தாம் எடுத்துக்கொண்ட ஜாக்கிரதையெல்லாம் வீணாகி விட்டதே, செய்த எச்சரிக்கையெல்லாம் பயனின்றிப் போய்விட்டதே என்று அவர் உள்ளம் பதைத்தது. உடனே மோட்டாரில் வெளிக் கிளம்பினார். பலாத்காரச் செயல்கள் நடப்பதாகத் தெரிந்த இடங்களுக்கெல்லாம் பறந்து சென்றார். அங்கங்கே ஜனக் கூட்டத்தைக் கலைந்து போகும்படி சொன்னார். இப்படி நகரைச் சுற்றிக் கொண்டு வருகையில் ஓரிடத்தில் ஆறு போலீஸ்காரர்கள் தடியால் அடிபட்டுத் தரையில் இரத்த வெள்ளத்தில் கிடப்பதைக் கண்டார். உடனே காரை நிறுத்தி விட்டு அருகில் போய்ப் பார்த்தார். நாலு பேர் செத்துக் கிடந்தார்கள். இரண்டு பேர் குற்றுயிராய்க் கிடந்தார்கள். இந்தக் காட்சியைக் கண்டதும் மகாத்மாவின் இருதயம் பிளந்து விடும்போலாகி விட்டது. அந்தச் சமயத்தில் சுற்றிலும் நின்ற ஜனங்கள் வந்திருப்பவர் மகாத்மா என்று அறிந்ததும் "மகாத்மா காந்திக்கு ஜே!" என்று கோஷமிட்டார்கள். மகாத்மாவுக்கு அந்தக் கோஷம் கர்ண கடூரமாயிருந்தது! அஹிம்சையைப் பற்றித் தாம்

மக்களுக்குச் செய்த உபதேசமெல்லாம் செவிடன் காதில் சங்கு ஊதின கதையாகி விட்டதே என்று எண்ணி வேதனைப் பட்டார். கோஷம் செய்தவர்களைக் கடும் சொற்களால் கண்டித்தார். குற்றுயிராயிருந்த இரண்டு போலீஸ்காரர்களையும் எடுத்து ஆஸ்பத்திரிக்கு அனுப்பினார். இவ்விதம் பல இடங்களிலும் சுற்றி ஜனங்களைக் கலைந்து போகச் சொல்லிவிட்டு இரவு வீடு திரும்பினார். ஆனால் பம்பாய் நகரமெங்கும் கலகமும் கொலையும் தீ வைத்தலும் நடப்பதாக மேலும் மேலும் செய்திகள் வந்துகொண்டேயிருந்தன. காந்தி மகான் பக்கத்திலிருந்த தம் துணைவர்களிடம் "நான் கட்டிய ஆகாசக் கோட்டை யெல்லாம் தகர்ந்து விட்டதே!" என்று வாய்விட்டுப் புலம்பினார். மேலும், மகாத்மா கூறியதாவது:—

"நான் பம்பாய்க்கு இச் சமயம் வந்து சேர்ந்ததும் கடவுளுடைய ஏற்பாடுதான். பம்பாய்க்கு வருவதற்கு எனக்குக் கொஞ்சங்கூட இஷ்டம் இல்லை. பர்தோலிக்கு நேரே போக விரும்பினேன். பம்பாய் நண்பர்கள் வற்புறுத்தியபடியால் வந்தேன். அப்படி வந்து இதை யெல்லாம் நேரில் பார்த்திரா விட்டால் ஜனங்கள் இவ்வளவு பயங்கரமாக நடந்து கொள்வார்கள் என்று நம்பியிருக்கமாட்டேன். எல்லாம் போலீஸாரின் பொய் அறிக்கைகள் என்று எண்ணியிருப்பேன். அந்த மட்டும் கடவுள் என்னைக் காப்பாற்றினார். நல்ல சமயத்தில் எனக்கு எச்சரிக்கை செய்தார். பொது மக்கள் இன்னும் அஹிம்சையை நன்கு உணரவில்லை யென்பதையும் ஆகையால் பொது ஜனச் சட்ட மறுப்புக்கு அவர்கள் தயாராக வில்லை யென்பதையும் எனக்குக் கண் முன்னே கடவுள் காட்டிவிட்டார்!"

இவ்வாறு சொல்லி மகாத்மா காந்தி தமது புதல்வர் ஸ்ரீ தேவதாஸ் காந்தியை உடனே சூரத்துக்குப் புறப்பட்டுப் போகச் சொன்னார். பம்பாயில் இப்படிப் பட்ட விபத்து நேர்ந்து விட்டபடியால் தமது பர்தோலி பிரயாணத்தை ஒத்திப் போட்டிருப்பதாகவும், பொதுஜனச் சட்ட மறுப்பு ஆரம்பிப்பதற்குரிய ஆயத்தங்களை யெல்லாம் நிறுத்தி வைக்கும்படியும் ஸ்ரீ தேவதாஸிடம் சொல்லி அனுப்பினார்.

அன்றிரவெல்லாம் மகாத்மா காந்தியும் அவருடைய துணைவர்களும் ஒரு கண நேரங்கூடக் கண்ணயரவில்லை.

* * *

**ம**றுநாள் 18உ பொழுது விடிந்தது. முதல் நாள் இரவு 11 மணிக்குப் பிறகு பலாத்கார சம்பவங்கள் நிகழவில்லை யென்று செய்தி வந்தது. அன்று காலை 10 மணி வரைக்குங்கூட பம்பாய் நகர மெங்கும் அமைதி நிலவி வருவதாகப் பல இடங்களிலிருந்தும் செய்தி வந்து கொண்டிருந்தது. மகாத்மா காந்தி முதல் நாள் சம்பவங்களைப் பற்றி "எங் இந்தியா"வுக்குக் கட்டுரை எழுத ஆரம்பித்தார். "ஒரு பெருங் கறை" என்பதாக அக் கட்டுரைக்குத் தலைப்புக் கொடுத்தார். பம்பாய்ச் சம்பவங்கள் தமது மனதைப் புண்படுத்தி விட்டது பற்றியும் அவை காரணமாகப் பொது ஜனச் சட்ட மறுப்பை ஒத்திப் போடவேண்டி நேர்ந்தது பற்றியும் எழுதினார். இந்த கட்டுரையைப் பாதி எழுதிக் கொண்டிருக்கையில் பரேல் என்னுமிடத்திலிருந்து அவசர டெலிபோன் செய்தி ஒன்று வந்தது. அங்கேயுள்ள ஆலைத் தொழிலாளிகள் அக்கம் பக்கத்திலுள்ள பார்ஸி சமூகத்தாரைத் தாக்குவதற்கு ஆயத்தம் செய்து

## என்ன சொன்னார்!



# தமிழிசைத் திருவிழா!

1. தமிழன்பர் ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு அவர்களின் தலைமையில் ஆஸ்தான கவிஞர் தமிழிசை விழாவைத் துவக்கி வைக்கிறார்.

●

2. தமிழிசைச் சங்கத்தார் ஆஸ்தான கவிஞருக்கு வரவேற்பு அளிக்கிறார்கள்.



சப் - இன்ஸ்பெக்டர்தான் அதிகாரத்தில் இருப்பவர். அவரே எந்தக் கேஸையும் விசாரணை செய்யும் முதல் அதிகாரி. முன்னாளில் சப் - இன்ஸ்பெக்டருக்கு 100-க்கு இத்தனை கேஸ் துலக்கித் தண்டனை கொடுக்கச்செய்ய வேண்டுமென்ற சர்க்கார் உத்தரவு இருந்தது. அவர் முறையாகக் கிராமந்தோறும் இரண்டு மூன்று யோக்கியப் பொறுப்புள்ள மனிதர்களைச் சிநேகம் செய்து வைத்துக் கொள்வார். அவர் எது செய்தாலும், அவருக்கு எந்தக் கஷ்டம் நேரிட்டாலும் இன்ஸ்பெக்டர் காப்பாற்றுவார். அந்த மனிதர்களும் இலாகாவுக்குப் பிரயாசைப் பட்டுத் துப்புத் துலக்கி உதவுவார்கள். சந்தேகப் பட்ட புள்ளிகளைக் கைவரிசை செய்து உண்மையைத் தெளிவார்கள். சப் இன்ஸ்பெக்டர் செய்ததைத் தவறாக மேலதிகாரி எடுத்துக் கொண்டாலும் ரகசியத்தில் அந்த அதிகாரிக்குச் சிட்சை கிடைக்குமே யல்லாது பொது மக்கள் முன்னால் நடவாது. இது அந்தக் காலமல்லவா? இப்பொழுது இந்தக் காலமல்லவா? போலீசுக்கு ரிப்போர்ட் போனதும் ‘ஏனய்யா, கோழிக்குஞ்சு திருட்டெல்லாம் போலீஸார்தானா கவனிக்க வேண்டும்?’ என்று கேட்கிறார்கள். பதினைந்து தினங்கள் கழிந்த பிறகு அந்த ரிப்போர்ட் பொய்யாகக் கொடுத்திருப்பதாகப் பிராது கொடுத்தவன் பேரிலேயே ஒரு கேஸைப் போட்டு விடுகிறார்கள். தனிமையில் உயர்தர அதிகாரிகளிடம் கேட்டால் அவர்கள் என்ன சொல்கிறார்கள் தெரியுமா?

“ஐயா! அரசாட்சியோ ஜனநாயக அரசாட்சி. முன்னாளில் எங்களது ஆட்சி. அது சரியாய்ப் போச்சு. இப்பொழுது சந்தேகப் பட்டவனை அடிக்கக் கூடாது; இம்சை செய்யக் கூடாது. ‘அப்பனே! நீ இந்தக் களவைச் செய்தாயா?’ என்று கும்பிட்டுக் கேட்க வேண்டும். அவன் மறுமொழியாக, ‘உடம்புக்கு எப்படி வருகிறது?’ என்று இன்ஸ்பெக்டரைக் கேட்டாலும் வாயை மூடிக்கொண்டு அவனை விட்டுவிட வேண்டியதா யிருக்கிறது. இல்லாவிடில் அவன் வெளியில் வந்து ஒரு டஜன் மனு அந்த இன்ஸ்பெக்டரைப் பற்றி எழுதிப் போட்டு விடுகிறான். அதை விசாரிக்க ஒரு மாத காலம் சரியாய்ப் போய் விடுகிறது. இந்தச் சந்தர்ப்பங்களில் கிராமங்களில் ‘நான் மனுப் போட்டு அந்த இன்ஸ்பெக்டரைத் தொலைத்து விட்டேன்’ என்று சொல்கிறான் மனுச் செய்தவன். அது அந்த இன்ஸ்பெக்டருக்கு மானக் கேடாய்ப் போய்விடுகிறது. மேலான அதிகாரிகளுக்கும் எந்த இன்ஸ்பெக்டர் மோசமானவன், எவன் நல்லவன் என்று நிர்ணயிப்பது சங்கடமாகி விடுகிறது. நாங்கள் என்ன செய்ய முடியும்?” என்பதாக ராமாயணம் படித்து விடுகிறார். அவர் சொல்வதில் உண்மை ஓரளவு இருக்கிறது.

சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் சட்டத்தின் மேல் பழி போட, பொது ஜனங்கள் சர்க்காரைக் குறை கூற, சர்க்கார் பொது மக்களின் பண்பாடு பற்றி உபதேசம் செய்யும்படியான ஒரு விஷச் சக்கரம் சுழன்று வருகையில் இதனுடைய பலன் என்னவாகும் என்று யார் கூற முடியும்?

ஒரு கிராமத்திற்கு இரண்டு தலையாரிகளும், மூன்று வெட்டியான்களும் இருக்கிறார்களே, அவர்களுடன் ஒரு கி. மு. வும் இருக்கிறாரே, இந்த ஆறு ராஜாக்களும் கிராம பந்தோபஸ்துக்குப் பொறுப்பு என்று சொல்லிவிட்டால் ஒரு களவு போகுமா?

ஏழு மைல் விஸ்தீரணத்துக்குள் இருபத்தைந்து கான்ஸ்டேபிள்களும் ஒரு எஸ். ஐ. யும் இருக்கிறார்களே, ‘நூற்றுக்கு எழுபத்தைந்து கேஸ் கண்டுபிடிக்காவிட்டால் உங்களுடைய தொப்பி நிலையாது’ என்று சொல்லி விட்டால் எந்தக் கேஸ்தான் துலங்காது?

ஆறாயிரம் மைலுக்கப்பால் இருந்து வந்த வெள்ளைக்காரன் அரசாட்சி நடக்கும்பொழுது எங்கள் பிரதேசத்தில் இப்படிப் பட்ட களவு நடந்திருக்கவில்லை. பன்னிரண்டு மாதங்களுக்குள் நான்கு பெரிய களவுகள். சர்க்கார் ஏஜண்டாக இருந்து நெல் பிடித்த மூட்டை 44 களவு. மாலை ஏழு மணிக்கு ஜேஜே என்று கூட்டம் போகிற ரோடில் ரூ.6,000 பெறுமான தங்க நகைகள் களவு. பாங்கிலிருந்து வீட்டில் வாங்கி வைத்த ரூ. 7,000 களவு. குளிக்கப் போன பெண்மணியிடமிருந்து ரூ. 2,000 பெறுமான தாலி உள்படக் களவு. இதுதான் நம் சுயராஜ்ய அரசாங்கம்.

களவு போய்விட்டது என்று பிராது கொடுத்தால் பொய்ப் பிராது கொடுத்ததாக ஒரு கேஸ். நல்ல சுயராஜ்யம். ரேடியோ பிரசங்கத்திலோ, மேடை சொற்பொழிவிலோ, அரசாங்க ஜபர்தஸ்திலோ சுயராஜ்யத்தை நிலைநிறுத்த முடியாது.

‘கத்தி போச்சு, வால் வந்தது, டும், டும்’ என்று குரங்கு பாடினமாதிரி ‘வெள்ளைக் காரன் போனான், ஜெயக் கொடி வந்தது— டும், டும்’ என்றுதான் பாட வேண்டியதா யிருக்குமோ என அஞ்சுகிறேன்.

# போலீஸும் பொதுஜனமும்

ஒரு கிராமவாசி

[சுயராஜ்யத்தில் போலீஸ்காரர்கள் தங்கள் கடமையை முன்போல் சரிவரச் செய்வதில்லை என்ற புகாரை அடிக்கடி கேள்விப்படுகிறோம். அதை யொட்டி ஒரு அறிவாளியான கிராமவாசி எழுதியிருக்கும் கட்டுரையைக் கீழே காணலாம். இக்கட்டுரை எழுதியவரைப் போல் நாம் அவ்வளவு நிராசையடைந்து விடவில்லை யென்பதைக் குறிப்பிட விரும்புகிறோம். ஒரு அரசியல் முறை மாறி இன்னொரு அரசியல் முறை வரும்போது இம்மாதிரி சில தொல்லைகள் ஏற்பட்டே தீரும். பொது மக்கள் ஜனநாயகப் பொறுப் புணர்ச்சியுடன் தங்கள் கடமையைச் செய்தால் போலீஸாரும் தங்கள் கடமையை நன்கு செய்யத் தொடங்கி விடுவார்கள். -ஆசிரியர், கல்கி]

சுயராஜ்யம் எதற்காகக் கேட்டோம்? வெள்ளைக்காரனை என் நாட்டை விட்டுப் போகச் சொன்னோம்?

"காந்திஜி நம் நாட்டில் வந்து விட்டார். கடவுள் அரசாட்சி இனி நடக்கும்" என்ற நம்பிக்கையினால்தான்.

இன்று காந்திஜி இல்லை; வெள்ளைக்காரனும் இல்லை. சுயராஜ்யம் வெம்பாகி விட்டது. இனி மூன்றாவது திறமையான ஆட்சி ஏதாவது ஏற்பட்டாலாவது நமக்கு விமோசனம் உண்டா?

"இதென்ன பயித்தியக்காரத்தனமான, பயங்கரமான கேள்வி?" என்றுதான் நீங்கள் எண்ணுவீர்கள். ஆனால் இந்த விதமான எண்ணம் என் மனதில் தோன்றக் கூடிய அவசியம் ஏதாவது இருக்க வேண்டுமல்லவா?

நான் வசிக்கும் பிரதேசத்திலிருந்து சில நிகழ்ச்சிகளைச் சொல்லுகிறேன்.

இது மறவர் மிகுதியாக வாழும் சீமை. வெள்ளைக்காரன் ஆட்சியில் அந்த ஜாதியாரை சி. டி. ஆக்டினால் கட்டுப் படுத்தியிருந்தார்கள். வரி வசூலிக்கவோ தங்கள் ஆட்சி அமைதியாக நடைபெறவோ நாட்டில் அராஜகம் வளரக்கூடாது என்பது அவர்களின் விருப்பம்.

குடிகாவல் என்பது மற்றொரு வழக்கம். ஒரு கிராமத்தை எடுத்துக் கொண்டால் அங்கே நானாவிதத் தொழில் செய்பவர்களும் ஜாதியாரும் வசிப்பார்கள். அன்னாரின் உடைமை பலபட்டரையாகத் திறந்த வெளியில் இருக்கும். அதற்குரிய பந்தோபஸ்து முறை அந்தக் கிராமத்தில் வசிக்கும் மறவர் சமூகத்தைச் சேர்ந்திருக்கும். அதற்குக் கூலி முறையாக 'சுதந்திரம்' என்ற பெயரால் தானிய ரூபமாகவும் பணமாகவும் மற்ற இனத்தார் மறவர் சமூகத்திற்குக் குறிப்பிட்ட அளவு சேர்த்து விடுவார்கள்; களவு போகாது. அப்படியே களவு போனாலும் களவு போன சாமானோ அதற்குரிய தொகையோ களவு கொடுத்தவருக்குச் செலுத்தி விடுவார்கள். இதற்காக அந்த மறவர் கூட்டம் இரவெல்லாம் கண் விழித்துக் கிராமத்தைப் பாதுகாக்கும்.

அப்பொழுது போலீஸ் உபயோகம் பொதுமக்கள் சம்பந்தப்பட்ட வரை மிகுதியாயிராது. அடிதடி, கொலை, கூட்டுக் கொள்ளை போன்ற பெரிய அளவில் நடக்கும் அராஜகச் செயலையே போலீஸார் கவனிப்பார்கள்.

இது மொத்தத்தில் கிராமங்களில் திருப்தியான வாழ்வைக் கொடுத்து வந்தது எனலாம்.

இன்றைய நிலை என்ன? சி. டி. ஆக்ட் எடுக்கப்பட்டு விட்டது. அந்தப் பண்டைய சமூகக் கட்டுப்பாட்டை உடைத்தெறிவதில் கண்ட வெற்றி, புதிய நிலைமையைச் சமாளிப்பதில் இல்லை. எங்கும் பிடிப்பு இல்லாமல் கோரக் களவுகளும் அமைதி யின்மையும் ஏற்பட்டு விட்டன.

பொதுமக்களுக்கு இன்னது செய்வதென்று நிலை புலப்படவில்லை. உடைமைகள் பந்தோபஸ்தாக இருக்கவில்லை என்பதை உணருகிறார்கள். களவுகளைக் குறித்துப் போலீஸாரிடம் புகார் செய்வது களவு கொடுத்தவருக்கே தீமை பயப்பதாய் இருக்கிறது. அதனால் களவாடுபவர் மேலும் தெம்பு அடைந்து மீண்டும் பெரிய களவு முயற்சியில் ஈடுபடுகிறார். இப்படியாகக் கிராமங்களில் பந்தோபஸ்தின்மை வளருகிறது.

போலீசுக்கு என்ன வந்தது? அதுவும் சொல்ல வேண்டிய விஷயம். முன்னால் நடந்த ஆட்சியைப் போலீஸ் ஆட்சி என்று வர்ணிக்கிறார்கள். போலீஸ் நிர்வாகத்தில்

எனவே, டச்சுக்காரர்களுக்கு இந்தோனேஷ்யர்களுடன் சமரச உடன்படிக்கை செய்து கொள்வதைத் தவிர வேறு வழி இராமல் போயிற்று.

இந்தோனேஷ்யாவுடன் சமரசம் செய்து கொண்டார்களெனினும், டச்சுக்காரர்களை ஆதிக்கச் சபலம் விட்டொழிய வில்லை.

'சமரசம் ஏற்பட்டு விட்டது' என்ற எண்ணத்துடன் இந்தோனேஷ்யர்கள் அமைதியாக இருந்த சமயத்தில், டச்சுக்காரர்கள் திடீரென்று உடன்படிக்கையைக் கிழித்து எறிந்துவிட்டு மீண்டும் காட்டுமிராண்டித்தனமாக யுத்தத்தை ஆரம்பித்தார்கள்.

அயர்ந்திருந்த இந்தோனேஷ்யர்களைத் திடீரென்று தாக்கி நிரந்தரமாக ஒடுக்கிவிட வேண்டும் என்று டச்சுக்காரர்கள் நினைத்தார்கள்.

ஆனால், சமாதானம் நிலவிய காலத்தில் டச்சுக்காரர்கள் அக்கிரமமாகப் போரை ஆரம்பித்தது உலகம் முழுதும் ஆத்திரத்தை உண்டாக்கியது.

டச்சுக்காரர்களின் அட்டூழியத்தையும் போர் வெறியையும் உலக நாடுகள் வன்மையாகக் கண்டித்தன.

அவ்வாறு வாயளவில் கண்டிப்பதுடன் இந்தியா நிற்கவில்லை; உடனே சென்ற வருஷ ஆரம்பத்தில் ஆசிய நாடுகளின் மகாநாடு ஒன்றைக் கூட்டியது.

ஆசியாவின் அதாவது, உலக ஜனத்தொகையில் பாதிக்கு மேற்பட்டவர்களின் பிரதிநிதிகள் அந்த மகாநாட்டில் கலந்து கொண்டார்கள்.

"டச்சு சர்க்கார் அதிகாரிகள் இந்தோனேஷ்யக் குடியரசுத் தலைவர்களை உடனே விடுதலை செய்யவேண்டும். 1950-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதிக்குள் டச்சுக்காரர்கள் தங்களுடைய அதிகாரம் முழுவதையும் இந்தோனேஷ்யர்களிடம் ஒப்புவித்துவிட வேண்டும்" என்று ஆசிய நாடுகள் மகாநாட்டில் ஏகமனதாக ஒரு தீர்மானம் நிறைவேறியது.

பண்டித ஜவாஹர்லால் நேருவின் தலைமையில் நிறைவேறிய மேற்படி தீர்மானத்துக்கு இணங்க உடனே இந்தோனேஷ்யத் தலைவர்கள் விடுதலை செய்யப்பட்டார்கள். 1950-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதிக்குள் டச்சுக்காரர்கள் இந்தோனேஷ்யர்களிடம் அதிகாரத்தையும் ஒப்புவித்துவிட்டார்கள்!

நாலு நாளுக்கு முன் இந்தோனேஷ்யாவில் குடியரசு ஆட்சி ஏற்பட்டுவிட்டது.

இந்தோனேஷ்யா அன்னிய நாட்டின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறுவதற்காக இந்தியா செய்த முயற்சி அவ்வாறு ஆச்சரியகரமான வெற்றியைக் கொடுத்திருக்கிறது.

# புது வருஷத்திலே கதி மோட்சம்



1950-ம் வருஷம் மங்களகரமாகவும் சந்தோஷகரமாகவும் ஆரம்பமாகி யிருக்கிறது!

இதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை!

ஏழு கோடி மக்கள் அகம் மகிழ்ந்து முகம் மலர்ந்து ஆனந்தக் கூத்தாடுகின்றார்கள் எனில், அது சாதாரணமான காரியமா?

ஆசியா நாடுகளில் ஒன்றான இந்தோனேஷ்யாவை முந்நூறு வருஷங்களாகச் சூழ்ந்திருந்த அடிமை அந்தகாரம் அகன்றுவிட்டது!

இந்தோனேஷ்ய மக்கள் துன்பம் நீங்கிச் சுதந்திர ஒளி பெற்று விட்டார்கள்!

இந்தோனேஷ்ய நகரங்களிலும் கிராமங்களிலும் தெருக்களிலும் குதூகலப் பிரவாகம் கரை புரண்டு ஓடுகிறது.

அந்த நாட்டில் டச்சு ஏகாதிபத்தியம் மறைந்து இந்தோனேஷ்யக் குடியரசு ஸ்தாபிதமாகிவிட்டது.

அங்கு மூன்று நூற்றாண்டுகளுக்கு மேலாகப் பறந்து வந்த டச்சுக் கொடி கீழே இறக்கப்பட்டு, இந்தோனேஷ்யாவின் இருவர்ணக் கொடி ஏற்றுவிக்கப்பட்டிருக்கிறது.

இந்தோனேஷ்யாவிலுள்ள ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு கட்டடத்திலும் சிவப்பும் வெண்மையும் கலந்த இந்தோனேஷ்யக் கொடி ஒளி வீசிப் பறந்து கொண்டிருக்கிறது.

டச்சு ஏகாதிபத்தியத்தின் அறிகுறிகள் எல்லாம் அறவே அகற்றப்பட்டிருக்கின்றன.

இந்தோனேஷ்யாவின் பாதுகாப்பைக் குடியரசுத் துருப்புகள் ஏற்றுக் கொண்டு விட்டார்கள். டச்சு அதிகாரிகளும் டச்சுத் துருப்புகளும் வெளியேறித் தங்களுடைய சொந்த நாட்டுக்குச் செல்ல ஆயத்தமாகி விட்டார்கள்.



டாக்டர் சுகர்ணு

சிறந்த தியாகியும் இந்தோனேஷ்யாவின் சுதந்திரத்துக்காகக் கால் நூற்றாண்டுக்கு மேல் அரும் பெரும் பாடு பட்டவருமான டாக்டர் சுகர்ணு, இந்தோனேஷ்யக் குடியரசின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்.

அந்தத் தேசத்தின் பல்வேறு கட்சியினராலும் ஏகமனதாய் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள சுதந்திர வீரர் சுகர்ணுவுக்கும், பிரதம மந்திரி ஹட்டா முதலிய மற்ற மந்திரிகளுக்கும், கோடிக்கணக்கான இந்தோனேஷ்ய மக்களுக்கும் இந்திய சர்க்காரின் சார்பிலும் இந்திய மகா ஜனங்களின் சார்பிலும் கவர்னர் ஜெனரல் ராஜாஜியும் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவும் வாழ்த்துக் கூறி யிருக்கிறார்கள். மற்றும் பல நாடுகளையும் சேர்ந்த பிரதிநிதிகள் நேரில் விஜயம் செய்து குடியரசு விழாவைக் கண்டு களித்ததுடன், இந்தோனேஷ்யாவுக்குத் தங்கள் தங்களுடைய தேச ஜனங்களின் மரியாதையையும் வாழ்த்து நிலையும் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

குடியரசு இந்தோனேஷ்யாவுக்கு முதன் முதலாக இந்திய ஸ்தானிகராகச் செல்லும் பாக்கியம் பெற்று, அங்கு டிசம்பர் மாதம் இருபத்தேழாம் தேதி நடந்த குடியரசு விழா வைபவத்தில் இந்திய ஜனங்களின் சார்பில் பங்கெடுத்துக் கொண்ட டாக்டர் சுப்பராயனைப் பாராட்டுகிறோம்.

இந்தோனேஷ்யா குடியரசு பெற்றது

ஜனநாயக லட்சியத்துக்கு வெற்றி; ஆசியா முழுவதற்கும் வெற்றி; இந்தியாவுக்கு மகோன்னதமான வெற்றி!

* * *

ஐந்து வருஷ காலமாக நடந்த இரண்டாவது உலக மகா யுத்தம் முடிந்தவுடனே, பல நாடுகளிலும் ஒரு பெரிய கேள்வி எழுந்தது.

“உலகத்திலே ஜனநாயகத்தைப் பாதுகாப்பதற்காக நடப்பதாய்க் கூறப்பட்ட மகா யுத்தம் முடிவடைந்து விட்டது. ஆனால், அதே ஜனநாயகத்தைத் தங்கள் தங்களுடைய நாடுகளில் நிலை நிறுத்துவதற்காக எத்தனையோ ஆண்டுகளாக நடந்துவரும் சுதந்திர யுத்தம் என்று முடியும்?” என்பதே அந்த முக்கியமான கேள்வி.

மேற்படி கேள்விக்குப் பதில் கிடைக்கும் காலம் என்றோ என சுதந்திரத்தை இழந்திருந்த நாடுகள் ஏங்கிக் கொண்டிருந்தன.

ஆனால், இந்தோனேஷியா மாத்திரம் அவ்வாறு ஏங்கிக் கொண்டிருக்க விரும்பவில்லை. அதற்குத் தகுந்தாற்போல் கிடைப்பதற்கரிய சந்தர்ப்பமும் அதற்கு வாய்த்தது.

சென்ற மகா யுத்தத்தின் போது கிழக்கு ஆசியாவில் ஜப்பான் படையெடுத்த உடனே, மலாயா, பர்மா முதலிய இடங்களிலிருந்து பிரிட்டிஷார் ஓடியதுபோல, இந்தோனேஷியாவிலிருந்து டச்சுக்காரர்களும் ஓடிப் போய் விட்டார்கள்.

ஆனால், தாங்கள் இழந்த இடங்களை மீண்டும் போர் செய்து பெறும் சக்தி பிரிட்டிஷாருக்கு இருந்தது. டச்சுக்காரர்களுக்கு அத்தகைய சக்தி அணுவளவும் இல்லை.

போர் புரிந்து ஜப்பானியரை அங்கிருந்து விரட்டி விட்டு மறுபடியும் இந்தோனேஷியாவை ஆக்கிரமித்துக் கொள்ளும் வல்லமைதான் டச்சுக்காரர்களுக்கு இல்லையே யொழிய, நிரபராதிகளான ஜனங்களைப் பலியிட்டுத் தங்களுடைய கொடுங்கோன்மையை நிலை நிறுத்தும் ‘வீரத்தனம்’ அவர்களுக்கு இருக்கத்தான் செய்தது!

டாக்டர் சுப்பராயன்

1945-ம் வருஷம் ஜப்பான் தோல்வியுற்றதும், ஜப்பானின் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்த இந்தோனேஷிய மக்கள் சிறிதும் தாமதமின்றிச் சுதந்திரப் பிரகடனம் செய்து, தங்களுடைய மாபெரும் தலைவர் டாக்டர் சுகர்ணுவை இந்தோனேஷியக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள்.

மீண்டும் டச்சுக்காரர்கள் அங்கு வருவார்கள் என்று இந்தோனேஷியர்கள் கனவிலும் நினைக்கவில்லை.

ஜப்பானின் கையால் படுதோல்வியடைந்து ஓடிய டச்சுக்காரர்கள் மீண்டும் இந்தோனேஷியாவில் ஆதிக்கம் செலுத்த வெட்கப்படுவார்கள் என்று அத் தேச ஜனங்கள் எண்ணினார்கள்.

டச்சுக்காரர்களோ வெனில், பிரிட்டிஷ், அமெரிக்கர்களின் உதவியால் மறுபடியும் இந்தோனேஷியாவை ஆக்கிரமித்துக் கொண்டு, தங்களுடைய மிருக பலத்தைப் பிரயோகித்தார்கள்.

அதன் விளைவாக இந்தோனேஷியா முழுதும் உதிர வெள்ளம் ஓடியது. எண்ணிக்கையற்ற தேசிய வீரர்கள் பலியானார்கள்.

இந்தோனேஷியாவின் சுதந்திரத்துக்காகத் தியாக வாழ்க்கையை மேற்கொண்ட சிறந்த தலைவர்கள் சிறையில் துன்பப்பட்டார்கள்.

இந்தோனேஷிய மக்கள் சொல்லொணாக் கஷ்ட நஷ்டங்களுக்கு ஆளாகிப் பரிதவித்தார்கள்.

எனினும், எவ்வளவு துன்பம் நேர்ந்தாலும் இனி டச்சுக்காரர்களின் ஆதிக்கத்துக்குப் பணிவதில்லை என்று இந்தோனேஷியர்கள் பிரதிக்ஞை செய்து உக்ரமாகப் போர் புரிந்தனர்.

மாதக் கணக்கிலும் வருஷக் கணக்கிலும் கோரப் போர் நடந்தது.

இந்தோனேஷிய மக்கள் சிறிதளவும் சோர்வு அடையவில்லை. இந்தோனேஷியர்களின் மன உறுதியைச் சிதைக்க முடியவில்லையே என்று டச்சுக்காரர்கள் தான் சோர்வடைந்தார்கள்!


காஷ்மீர் பிரச்னையைத் தீர்ப்ப-
தற்காக இந்தியா மூன்று மாதத்-
துக்கு ஒரு தடவை ஐ.நா.சபைக்குப்
கோஷ்டிகளை
அனுப்பி வரலாம்;




சரத் சந்திர போஸ் டில்லியில்
தமது கொடியைப் பறக்க
விடலாம் — கனவில்தான்!


ஆந்திர மாகாணம் ஏற்பட்ட பின்
மும்மூர்த்திகளுக்குள் பதவிப்
போட்டி பிரமாதமாக
இருக்கலாம்.




மலர் 9 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 22

# என்ன சேதி?

## பார்லிமெண்டிலே

அமெரிக்கா சுதந்திரம் பெறுவதற்குத் தேயிலைதான் காரணமாக அமைந்தது. பிரிட்டிஷாரின் கொடுங்கோன்மையைச் சகித்து வந்த அமெரிக்கர்கள், பிரிட்டிஷாரின் தேயிலையைச் சகிக்க மறுத்து விட்டார்கள். அதன் காரணமாக மூண்ட போர் பிரிட்டிஷாருக்குத் தோல்வியைக் கொடுத்தது. அமெரிக்கர்களுக்குச் சுதந்திரத்தைக் கொடுத்தது. பாரத நாடு சுதந்திரம் பெறுவதற்கு உப்பு காரணமாக இருந்தது. அமெரிக்காவின் சுதந்திரப் போரில் தேயிலை முக்கிய ஸ்தானம் வகித்ததுபோல், பாரத தேசத்தின் சுதந்திர யுத்தத்தில் உப்புச் சத்தியாக்கிரகம் முக்கிய ஸ்தானம் வகித்தது சரித்திரப் பிரசித்தமான விஷயம்.

அதுபோலவே இப்போது இந்தியாவில் கறுப்பு மார்க்கெட் முதலாளிகளை எதிர்த்துப் போர் புரிவதற்குச் சர்க்கரை முக்கிய காரணமாக அமைந்திருக்கிறது. இதுவரையில் முதலாளித்துவக் கொடுங்கோன்மையால் நேர்ந்த பல கஷ்டங்களையும் பொது ஜனங்கள் பொறுத்து வந்தார்கள். ஆனால், இனிமேல் அவர்கள் அவ்வாறு சகித்துக் கொண்டிருக்கப் போவதில்லை என்பதையே இந்தியா பார்லிமெண்டில் சர்க்கரைப் பஞ்சத்தைக் கண்டித்து நடந்துள்ள விவாதமானது காட்டுகிறது. "சாதாரணத் திருடர்களைத் தண்டிக்கச் சட்டங்கள் இருக்கின்றனவே. கோடிக்கணக்கான ஜனங்களைத் துன்புறுத்திக் கோடிக் கணக்கில் கொள்ளையிடும் பாதகர்களைத் தண்டிப்பதற்கு வழியில்லையா?" என்று சில அங்கத்தினர்கள் ஆத்திரப்பட்டார்கள். மற்றும் சிலர் பிளாக் மார்க்கெட் படுமோசக்காரர்கள்மீதுள்ள கோபத்தைச் சர்க்கார் மீது காட்டினார்கள். வேறு சிலர் சர்க்கரை சிண்டிகேட் என்ற குழுவை ராக்ஷசப் பிறவி என்று கண்டித்தார்கள்.

"காந்தி மகான் உப்பின் மூலம் ஜனங்களுக்கு ஜீவனைக் கொடுத்தார். ஆனால், அத்தகைய மாமுனிவரைத் தந்த பாரத நாட்டில் கறுப்பு மார்க்கெட் காரர்கள் சர்க்கரையின் மூலம் அதாவது சர்க்கரைப் பஞ்சத்தைச் சிருஷ்டித்து ஜனங்களின் உதிரத்தை உறிஞ்சி வருகிறார்கள்" என்று ஒருவர் உள்ளம் உருகினார்.

## மனக் கொதிப்பு

இந்தியா பார்லிமெண்டில் இதற்கு முன் எவ்விஷயமாகவும் இவ்வளவு கடுமையான விவாதம் நடந்ததில்லை; எல்லா அங்கத்தினர்களும் இப்படி ஏகோபித்த முறையில் காரசாரமான வார்த்தைகளை உபயோகித்ததில்லை; எந்த விஷயத்தை யொட்டியும் இவ்வளவு மனக் கொதிப்பு ஏற்பட்டதில்லை. எனவே, பொது ஜனங்களின் சகிப்புத் தன்மையை இனியும் பரிசோதிப்பது ஆபத்தாக முடியும் என்பதை மேற்படி விவாதம் தெளிவாக்கியிருக்கிறது. கண்ட்ரோலை விதித்தாலும் கண்ட்ரோலை எடுத்தாலும் சில முதலாளிகள் தங்களுடைய மாயாஜால வேலைகளால் அந்தந்த நிலைமையை எவ்வாறு பயன்படுத்திக் கொள்கிறார்கள் என்பதும் வெளியாகியிருக்கிறது.

விவாதத்துக்குப் பதில் அளிக்கையில், சர்க்கரைப் பஞ்சத்தின் காரணங்களைப் பற்றி விசாரிப்பதற்காக ஒரு கமிட்டியை நியமிப்பதாய் உணவு மந்திரி ஸ்ரீ ஜெயராம்தாஸ் தௌலத்ராம் உறுதி கூறினார். பார்லிமெண்டில் நிகழ்ந்த கடுமையான விவாதத்தின் தன்மையைச் சர்க்கார் நன்கு உணர்ந்து சர்க்கரைப் பஞ்சத்தைப் போன்றதொரு நெருக்கடி இனிமேலாவது ஏற்படாமல் முன் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். சர்க்கரைப் பஞ்சத்துக்குக் காரணஸ்தர்கள் விஷயத்தில் தயவு தாட்சண்யம் காட்டாமல் தகுந்த நடவடிக்கைகளைக் கைக் கொள்ள வேண்டும்.

# புது வருஷ ஜோசியம்!


ஜான் புல்
1939


1950-ல் பிரிட்டன்
மேற்கொண்டு இன்னும்
அதிகச் சிக்கன முறை-
களைக் கைக்கொள்ள
நேரலாம்;
ஜான் புல்
1950


எந்தப் பிரச்னையையும் தீர்க்காமல்
காலம் கடத்துவதில் கைதேர்ந்த
ஐ.நா.சபை மேற்படி கீர்த்திக்குப்
பங்கம் ஏற்படாமல் பார்த்துக்
கொள்ளலாம்;
பிரச்னைகள்
பரிகார
முறைகள்


நமக்குத் தெரிந்த வாத வித்தையை
யெல்லாம் காட்டித் தீர்த்த ஜபருல்லா கான்
மேற்கொண்டு என்ன புரளுவது ! ! !
என்று மூளையை உடைத்துக்
கொள்ளலாம்;

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 9 இதழ் 22 } ஜனவரி 1 { விரோதி மார்கழி 18







மகத்தான ஆரம்பம்



ஜனவரி 14 உ முதல்



மாடர்ன் தியேட்டர்ஸ்

# பொன்முடி

உணர்ச்சி மிகுந்த காதல் கதை



கதை. பாரதிதாசன்

டைரக்ஷன்

எல்லிஸ் R. டங்கன்

# கோத்ரெஜ் வத்னி டாயிலெட் சோப்



ரிஜிஸ்டர்டு



இத்துடன்
சிறிய ('பேபி') சைஸ்

(தாய்நாட்டைச் சார்ந்தது)

மற்றவர்கள் வாக்களிக்கும் எல்லா நன்மைகளையும் அது வழங்குகிறது. இந்த சுத்தமான பச்சை நிற சோப்பை இன்றே வாங்குங்கள். இதனால் நீங்கள்—கடைசி தேசல் வரையிலும்—அதனுடைய தூய்மையான மணம் கமழும் நுரையினால் அதிக குதூகலமடைவீர்கள். இத்துடன் குழந்தைகளின் சருமத்திற்கும் ஒரு போஷாக்கு போன்றது—இதத்தையும், தூய்மையையும் அழகையுமளிக்கிறது.



.6 அணா

## ஒப்புயர்வற்ற சுதேசி ஸோப்பானது

கீர்த்தி வாய்ந்த வேறு சில கோத்ரெஜ் சோப்புகள்

நெ. 1 - நெ. 2 - சாண்டல் - லிம்டா (வேப்) கல் - ஷேவிங் ஸ்டிக் - ஷேவிங் 'ரவுண்ட்'

மேலும் கிளிசரின், கூந்தல் தைலம்



100 சதர் தூய்மைக்கும், மிருகக் கொழுப்பற்றதென்பதற்கும் உத்திர வாதமானது.

கோத்ரெஜ் சோப்ஸ், லிமிடெட்
மதராஸ்: 164, பிராட்வே;
கொச்சின்: 6/36, கல்வத்தி.

# Order your Copy NOW!





## THE NATION'S LEADERS

MAHATHA GANDHI
RAJAGOPALACHARIAR
PANDIT NEHRU
VALLABHAI PATEL
PATTABHI SEETARAMAYYA
MRS. SAROJINI NAIDU

Each of six sheets beautifully printed in five colours by letterpress and off-set with a reproduction of an Artist's Drawing in Sepia.

REAL ART PAPER—SIZE 14"×19"

SEND YOUR ORDER NOW.
TRADE ENQUIRIES INVITED.

POSTAGE ANYWHERE IN INDIA BY REGD. POST. 4 ANNAS EXTRA.

**Rs. 1/4 EACH**

**ASSOCIATED PRINTERS**
MOUNT ROAD, MADRAS & MAHATMA GANDHI ROAD, BANGALORE.

---

## ஸ்பெஷல் கன்ஸெஷன் கூபன்

**அஸோஸியேடட் பிரிண்டர்ஸ், மவுண்ட்ரோட், மதராஸ்**

அன்பார்ந்த ஐயா,

கீழ்க்கண்ட விலாசத்திற்கு ............ பிரதிகள் நேஷனல் லீடர்ஸ் காலண்டர், ஸ்பெஷல் ரேட் ஒன்று ரூ. 1¼ வீதம், தபால் சார்ஜ் இல்லாமல், தயவுசெய்து அனுப்பி வையுங்கள்.

....................................

....................................

....................................    ....................................

பொங்கற் புது
நாளும் வருகிறது
அன்றே மங்களமான...

# கிருஷ்ண விஜயம்



உங்களை மகிழ்விக்க வருகிறது
ஜுபிடரின்
மகோன்னத வெளியீடு
டைரக்ஷன்-சங்கர் ராவ் நட்கர்ணி

ஒவ்வொரு தியேட்டர் முதலாளியும்
தங்கள் தங்கள் தியேட்டரில் போட்டி
போட்டுக்கொண்டு காண்பிக்கவே-
ண்டிய அற்புதமான திரைப்படம்.....



ஸ்டூடியோ-சென்ட்ரல்

